உ

கடவுள் துணை.

# தாயுமான சுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு.

இஃது

திருத்தணிகை

சரவணப்பெருமாளைய ரவர்களால்

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க - பரிசோதித்து,

சிதம்பரம்

கருணானந்த சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

சிந்தாத்திரிப்பேட்டை

தெல்லுமண்டி

வெங்கட்டராமமுதலியார்

குமாரராகிய

கேசவமுதலியாரவர்களது

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிங்கள௵ - ஆடி௴.

மோப்பேர், சாமிநாயக்கர்வீதியில், நெம்பர். 53.

உ

# தாயுமானசுவாமிகளது

## சரித்திரச்சுருக்கம்.



தென்னாடுகள் பலவற்றினுஞ் சிறந்து விளங்குகின்ற சோழ மண்டலத்திலே யுள்ள வேதாரணிய மென்னும் வடமொழிப்பெய ரையுடைய,— திருமறைக் காடாகிய சிவஸ்தலத்திலே சற்றேறக் குறைய -௱எ௰- வருஷத்துக்கு முன்பாக வேளாண் குல திலகரா யும், குருலிங்கசங்கமபத்தியிலேசிறந்தவராயும், கேடிலியப்பபிள் ளையென்பவரொருவர் இருந்தார். அவராலே அந்தச்சிவஸ்தலவிசார ணை நடத்தப்பட்டுக்கொண்டிருந்தது- அக்காலத்திலே திரிசிரபுரத் திலே அரசாட்சிசெய்துகொண்டிருந்த விஜயரகுநாதசொக்கலிங்க நாயகரென்பவர் கேடிலியப்பபிள்ளையினுடைய நற்குணங்களையும் கணக்குவல்லமையையும் சிலர் சொல்லக்கேட்டு அவரை அழைப்பி த்துப் பரீக்ஷித்து அவருக்குப் பெரிய சம்பிரதி யுத்தியோகங்கொடு த்துத் தம்மிடத்தேவைத்துக்கொண்டார், அந்தக்கேடிலியப்பபிள் ளையானவர் சந்ததியில்லாதவராயிருந்த தமையனாருக்குத்தமதுடை ய -ஒரே- பேறாகிய சிவசிதம்பரபிள்ளையென்னுங் குமாரனைக்கொ டுத்துவிட்டிருந்ததினால் தமக்குச்சந்ததி உண்டாக அருள்செய்யும் படிக்கு அந்தத்திரிசிரபுரத்தில் எழுந்தருளியிருக்கின்றதாயுமானே சுரரைத் தரிசித்துக்கொண்டுவந்தார். அந்தக்கடவுளது திருவருளினா லே ஓராண்பிள்ளைபிறந்தது அதுகண்டு தகப்பனார் மகிழ்கூர்ந்து அக்கடவுளுக்குக் காணிக்கைமுதலானவைசெலுத்திக் குமாரனுக்கு த்தாயுமானவ ரென்கிற அக்கடவுளது பெயரைக்கொடுத்தார். அந்த த்தாயுமானவர் தன்தகப்பனாருக்கு மிகவும் மனமகிழ்ச்சி யுண்டாகு ம்படிக்கு அவர்செய்யுமுயர்ச்சி யளவிற்கு அதிகமான கீர்வாணம் தமிழ்முதலிய கல்விப்பயிற்சியிலேசிறந்தவரானார். உண்மை அன்பு பொருமை அடக்கம் இரக்கம் இவைமுதலியநற்குணங்களெல்லாம் அவரோடுகூடவேவளர்ந்தன. ஓர்அஞ்ஞானியினது மனமானது நிலை யில்லாதசெல்வப்பொருளையெப்படிவிரும்புமோ அப்படியேயிவர து மனமானது தத்துவப்பொருளையே விரும்பிநின்றது. அப்படி யிருக்கையில்திருமூலநாயனார்மரபிலேயெழுந்தருளிய மௌனதே சிகர். தாயுமானவரைச்சந்தித்து அவரது அதிதீவிரபக்குவத்தைக்கண் டு வேதாகமங்களின்முடிவான தத்துவப்பொருளை உபதேசித்தருளி

னர். அதுமுதலாகத்தாயுமானவர்தமது ஞானாசாரியரிடத்தே மிகுந்த பத்தியுடையவராய் அவ்வுபதேசப்பொருளைச் சிந்தித்துத்தெளிந்து தினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே நிஷ்டைசெய்துகொண்டுவந்தார். பின்பு தாயுமானவருக்குத் தகப்பனார் தேகவியோகத்தை அடைதலினாலே அவரது லௌகிகத்தொழிலை அரசனதுவேண்டுதல்பற்றி அதில் விருப்பமில்லாதவராயிருந்தும் ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. அரசனானவன் அவரை முதலிலே ஞானவானென்று அறிந்திலனாகினும், கேடிலியப்பப்பிள்ளையினும் இவர் யோக்கியமொன்று நன்குமதித்து மிகவுஞ் சிறப்புச்செய்துவைத்திருந்தான். ஆனால் கழைக்கூத்தனுடைய கருத்து உடல்கட்டிலும் அவனது செய்கைக்கூத்திலும் எப்படி வைக்கப்பட்டிருக்குமோ அப்படியே தாயுமானவரது கருத்துச் சிவத்திலும், அவரது செய்கை லௌகிகத்திலும், வைக்கப்பட்டிருந்தன. இப்படிக்குச்சிலநாள்கள் சென்றனமேல் அரசன் அவரிடத்தே விளங்கிய அபூர்வமான சில செய்கைகளைக்கண்டு அவரது மகிமையை அறிந்துகொண்டான். உடனே விவேகியாகிய அவ்வரசனுக்கு அவரைக்குறித்து அச்சமும் அன்பும் உண்டாதலால் அவரை அழைப்பித்து உயர்ந்த ஆசனத்தின்மேல் இருந்தருளப்பண்ணி சுவாமி அடியேன் இதுவரையிலே உமது மகிமையைக் கண்டு கொள்ளமாட்டாதவனா யிருந்ததினாலே உமக்கு ஊழியஞ்செய்யத்தக்க நான் உம்மை யெனது ஊழியத்திலே வைத்திருந்தேன். ஆயினும், இது பெரியகுற்றமாகலின் கிருபாமூர்த்தி யாகிய தேவரீர் இக்குற்றத்தைப்பொறுத்தருளியின்று முதலாக அடியேனால் ஆகவேண்டியவற்றைச் செய்வித்துக்கொண்டு நிஷ்டைக்குக்குறைவுபடாமல் இருந்தருளலாமென்று வேண்டுதல்செய்தான். அதுகேட்டவுடனே தாயுமானவர் திருவுளமகிழ்ந்து அன்று முதலாக அளவற்றஞானயோகத்திலே இருந்துகொண்டு கடவுளையும் குருவையும் அற்புதசின்மய மதுரமான தமிழ்ச்செம்பாடல்களைப் பாடித் துதிசெய்துகொண்டுவந்தார். இப்படியிருக்கையில் அவ்வரசன் இறந்துபோய்விட்டான் அவ்வரசன்மனைவி தாயுமானவரது திருமேனியின்கண்ணேயுள்ள அழகைக்கேள்விப்பட்டு அவரை அழைப்பித்துக்கண்களிகூரநோக்கிக் கேள்விப்பட்ட வளவினும் அதிகமாய்விளங்குதலால் உளமருண்டு அவரைத்தன்னரசாட்சிக்குத் தலைவராக்கவும், தன்னால்விரும்பப்பட்ட தகாதசெய்கைக்கு உடன்படுத்தவும், தான்கொண்ட கருத்தைக்குறிப்பித்தாள். அக்கருத்தை அறிந்த தாயுமானவரோவென்றால், உடனே ஒருபாயவழியினாலே அங்கிருந்து தம்மைவிடுவித்துக்கொண்டு அவள் அரசாட்சியினெல்லையைக்கடந்து இராமநாதபுரத்துச் சீமைக்கு எழுந்தருளினார். இதுசெய்திசிதம்பரப்பிள்ளையின்செவியை அடைந்ததனாலே அவருப்சிறிதாய்னு

மாராகிய அருளையப்பிள்ளையும் தேடிகண்டுபிடித்துச் சந்ததிவிளங்கவேண்டுமென்னுங்கருத்தைக்கொண்டு திருக்கலியாணஞ்செய்யும்படி முயற்சிசெய்தார்கள். தாயுமானசுவாமிகளுக்கு அதிகாரியத்திலேசிறிதுந்திருவுளமில்லாதிருந்தும் தமையனார் தம்வேண்டுதலின்மிகுதியினாலே உடன்படவேண்டியதாயிற்று-உடனே பத்தினியார் ஓராண்பிள்ளையைப் பெற்றுவைத்துச் சிவபதம் அடைந்தார். அந்தப்பிள்ளைக்குக் கனகசபாபதிப்பிள்ளையென்று பெயரிடப்பட்டது. அதுமுதலாகத் தாயுமானசுவாமிகள் கௌபீனத்தோடு பரிசுத்தசிவஸ்தலந்தோறுஞ் சஞ்சரித்துக்கொண்டு இவ்வுலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் மெய்ஞ்ஞானவொளியைப்பெற்று அஞ்ஞானவிருளினின்று நீங்கிஉய்யும்படிக்குப் பலவகைப்பட்ட அற்புதமான பாடல்களைச் செய்தருளினார் அருளையரென்பவரும் அவரிடத்தே தத்துவோபதேசம்பெற்றுக்கொண்டு அவரைவிட்டு நீங்காமல் பணிவிடைசெய்துகொண்டுவந்தார்.

தாயுமானசுவாமிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாகிய சிவத்திலேகலந்தபின்பு அருளையசுவாமிகள் அகவற்பாவினாலே குருவைத்துதித்துச் சிவயோகத்திலேயிருந்து தமக்குப்பின் பக்குவப்பட்டுவரும் அடியார்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும்படி ஷை கனகசபாபதிப்பிள்ளைக்குஅபிஷேகம் செய்தருளினார். இக்குருபரம்பரையில் தஞ்சைமாநகரத்துக்குக் கீழ்பால் அன்னப்பன் பேட்டையிலுள்ள மடத்தில் இப்போது இருக்கின்ற அம்பலவாணசுவாமிகளுடைய அடியார்கூட்டத்திலே ஒருவராகியும், அந்தஆதீனத்துக்கு உரியவராகியும், உள்ள எடுத்துக்கட்டி அருணாசலநாயனாரவர்களிடத்திலிருந்த ஆதீன புஸ்தகத்தையும் மற்றும் சிலபுஸ்தகங்களையும்அழைப்பித்துஒப்பிட்டு அச்சிற்பதிப்பித்தேனென்றறிக.

---

தாயுமானசுவாமிகளது

சரித்திரம் - முற்றுப்பெற்றது.



# நூலின் உட்பிரிவு.





உ

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிகள்

## பாடல்.

## திருவருள்விலாசப்

### பரசிவவணக்கம்.

---

### ஆசிரியவிருத்தம்.

அங்கிங்கெனாதபடியெங்கும்ப்ரகாசமா
    யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெதுதன்னருள்வெளிக்குளே
    யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சைவைத்துயிர்க்குயிராய்த்
    தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெதுசமயகோடிகளெலாந்
    தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர்வழக்கிடவுநின்றதெது
    வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொருசித்தாகியின்பமா
    யென்றைக்குமுள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்றவெல்லையுளதெதுவது
    கருத்திற்கிசைந்ததுவே
கண்டனவெலாமோனவுருவெளியதாகவுங்
    கருதியஞ்சலிசெய்குவாம். (க)

ஊரனந்தம்பெற்றபேரனந்தஞ்சுற்று
    முறவனந்தம்வினையினா
லுடலனந்தஞ்செய்யும்வினையனந்தங்கருத்
    தோவனந்தம்பெற்றபேர்
சீரனந்தஞ்சொர்க்கநரகமுமனந்தநற்
    றெய்வமுமனந்தபேதந்

திகழ்கின்றசமயமுமனந்தமதனுஞ்ஞான *
சிற்சத்தியாலுணர்ந்து *
காரணந்தங்கோடிவருஷித்தெனவன்பர் *
கண்ணும்விண்ணுந்தேக்கவே *
கருதரியவானந்தமழைபொழியுமுகிலைநங் *
கடவுளைத்துரியவடிவைப் *
பேரானந்தம்பேசிமறைபணந்துஞ்சொலும் *
பெரியமௌனத்தின்வைப்பைப் *
பேசருமனந்தபதஞானவானந்தமாம் *
பெரியபொருளைப்பணிகுவாம்- (உ)

அத்துவிதவத்துவைச்சொற்ப்ரகாசத்தனியை *
யருமறைகண்முரசறையவே *
யறிவினுக்கறிவாகியானந்தமயமான *
வாதியையனாதியேக *
தத்துவசொரூபத்தைமதசம்மதம்பெருச் *
சாலம்பரகிதமான *
சாசுவதபுட்கலநிராலம்பவாலம்ப *
சாந்தபதவ்யோமநிலையை *
நித்தநிர்மலசகிதநிஷ்ப்ரபஞ்சப்பொருளை *
நிர்விஷயசுத்தமான *
நிர்விகாரத்தைத்தடத்தமாய்நின்றொளிர் *
நிரஞ்சனநிராமயத்தைச் *
சித்தமறியாதபடிசித்தத்தினின்றிலகு *
திவ்யதேஜோமயத்தைச் *
சிற்பரவெளிக்குள்வளர்தற்பரமதானபர *
தேவதையையஞ்சலிசெய்வாம் (௩)

திருவருள்விலாசப்பரசிவவணக்கம்-முற்றிற்று.

---

## பரிபூரணானந்தம்,

வாசாகயிங்கிரியமன்றியொருசாதன *
மனோவாயுநிற்கும்வண்ணம் *
வர்லாயமாகவும்பழகியறியேன்றுறவு *
மார்க்கத்தினிச்சைபோல *

நேசானுசாரியாய்விவரிப்பேனந்த
நினைவையுமறந்தபோது
நித்திரைகொள்வேன்றேகநீங்குமெனவெண்ணிலோ
நெஞ்சந்துடித்தயருவேன்
பேசாதவானந்தநிட்டைக்குமறிவிலாப்
பேதைக்கும்வெகுதூரமே
பேய்க்குணமறிந்திந்தநாய்க்குமொருவழிபெரிய
பேரின்பநிட்டையருள்வாய்
பாசாடவிக்குளேசெல்லாதவர்க்கருள்
பழுத்தொழுகுதேவதருவே
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே (௮)

தெரிவாகவூர்வனநடப்பனபறப்பன
செயற்கொண்டிருப்பனமுதற்
றேகங்களத்தனையுமேகங்கொள்பௌதிகஞ்
சென்மித்தவாங்கிறக்கும்
விரிவாயபூதங்களொன்றொடொன்றாயழியு
மேற்கொண்டசேடமதுவே
வெறுவெளிநிராலம்பநிறைசூன்யமுபசாந்த
வேதவேதாந்தஞானம்
பிரியாதபேரொளிபிறக்கின்றவருளருட்
பெற்றோர்கள்பெற்றபெருமை
பிறவாமையென்றைக்குமிறவாமையாய்வந்து
பேசாமையாகுமெனவே
பரிவாயெனக்குநீயறிவிக்கவந்ததே
பரிபாககாலமலவோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே- (௯)

ஆராயும்வேளையிற்பிரமாதியாலு
மையவொருசெயலுமில்லை
யமைதியொடுபேசாதபெருமைபெறுகுணசந்த்ர
ராமெனவிருந்தபேரு
நேராகவொருகோபமொருவேளைவரவந்து
நிறைவொன்றுமில்லாமலே
நெட்டுயிர்த்துத்தட்டழிந்துளறுவார்வசன
நிர்வாகமொன்றபேரும்

பூரியமாயொன்றுபேசுமிடமொன்றைப்
புலம்புவார்சிவராத்திரிப்
போதுதுயிலாமென்றவிரதியருமறிதுயிற்
போலேயிருந்துதுயில்வார்
பாராதிதனிலுள்ளசெயலெலாமுடிவிலே
பார்க்கினின்செயலல்லவோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே (௫)

அண்டபகிரண்டமும்மாயாவிகாரமே
யம்மாயையில்லாமையே
யாமெனவுமறிவுமுண்டப்பாலுமறிகின்ற
வறிவினையறிந்துபார்க்கி
னெண்டிசைவிளக்குமொருதெய்வவருளல்லாம
லில்லையெனுநினைவுமுண்டிங்
கியானெனதறத்துரியநிறைவாகிநிற்பதே
யின்பமெனுமன்புமுண்டு
கண்டனவெலாமல்லவென்றுகண்டனைசெய்து
கருவிகரணங்களோயக்
கண்மூடியொருகணமிருக்கவென்றாற்பாழ்த்த
கர்மங்கள்போராடுதே
பண்டையுளகர்மமேகர்த்தாவெனும்பெயர்ப்
பக்ஷநானிச்சிப்பனோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே (௬)

சந்ததமுமெனதுசெயனினதுசெயலியானெனுந்
தன்மைநினையன்றியில்லாத்
தன்மையால்வேறலேன்வேதாந்தசித்தாந்த
சமரசசுபாவமிதுவே
யிந்தநிலைதெளியநானெக்குருகிவாடிய
வியற்கைதிருவுளமறியுமே
யிந்நிலையிலேசற்றிருக்கவென்றான்மடமை
யிதசத்ருவாகவந்து
சிந்தைகுடிகொள்ளுதேமலமாயைகன்மந்
திரும்புமோதாடுவழக்காய்ச்
சென்மம்வருமோவெனவும்யோசிக்குதேமனது
சிரத்தையெனும்வாளுமுதவிப்

பந்தமறமெய்ஞ்ஞானதீரமுந்தந்தெனைப்
பாதுகாத்தருள்செய்குவாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணாநந்தமே (௫)

பூதலயமாகின்றமாயைமுதலென்பர்சிலர்
பொறிபுலனடங்குமிடமே
பொருளென்பர்சிலர்கரணமுடிவென்பர்சிலர்குணம்
போனவிடமென்பர்சிலபேர்
நாதவடிவென்பர்சிலர்விந்துமயமென்பர்சிலர்
நட்டணடுவேயிருந்த
நாமென்பர்சிலருருவமாமென்பர்சிலர்கருதி
னுடிலருளென்பர்சிலபேர்
பேதமறவுயிர்கெட்டநிலயமென்றிடுவர்சிலர்
பேசினருவென்பர்சிலபேர்
பின்னுமுன்னுங்கெட்டசூனியமதென்பர்சிலர்
பிறவுமேமொழிவரிவையாற்
பாதரசமாய்மனதுசஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணாநந்தமே. (௬)

அந்தகாரத்தையோரகமாக்கியின்போலென்
னறிவைச்சுருக்கினவரா
ரவ்வறிவுதானுமேபற்றினதுபற்று
யழுந்தவுந்தலைமீதிலே
சொந்தமாயெழுதப்படித்ததார்மெஞ்ஞான
சுகநிஷ்டைசேராமலே
சோற்றுத்துருத்தியைச்சதமெனவுமுண்டுண்டு
தூங்கவைத்தவரார்கொலோ
தந்தைதாய்முதலானவகிலப்ரபஞ்சந்
தனைத்தந்ததெனதாசையோ
தன்னையேநோவனோபிறரையேநோவனோ
தற்காலமதைநோவனோ
பந்தமானதுதந்தவினையையேநோவனோ
பரமார்த்தமேதுமறியேன்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணாநந்தமே. (௭)

வாராதெலாமொழியவருவனவெலாமெய்த
மனதுசாக்ஷியதாகவே
மருவநிலைதந்ததும்வேதாந்தசித்தாந்த
மரபுசமரசமாகவே
பூராயமாயுணரவாகமமுணர்ந்ததும்
பொய்யுடலைநிலையன்றெனப்
போதநெறிதந்ததுஞ்சாசுவதவானந்த
போகமேவீடென்னவே
நீராளமாயுருகவுள்ளன்புதந்ததும்
நின்னதருளின்னுமின்னும்
நின்னையேதுணையென்றுன்னையேகாக்கவொரு
நினைவுசற்றுண்டாகிலோ
பாராதியறியாதமோனமேயிடைவிடாப்
பற்றாகநிற்கவருள்வாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௮)

ஆழாழிகரையின்றிநிற்கவிலையோகொடிய
ஆலமமுதாகவிலையோ
அக்கடலின்மீதுவடவனனிற்கவில்லையோ
அந்தரத்தகிலகோடி
தாழாமனிலைநிற்கவில்லையோமேருவுந்
தனுவாகவளையவிலையோ
சத்தமேகங்களும்வஜ்ரதரனாணையிற்
சஞ்சரித்திடவில்லையோ
வாழாதுவாழவேராமனடியாற்சிலையு
மடமங்கையாகவிலையோ
மணிமந்த்ரமாதியால்வேண்டுசித்திகளுலக
மார்க்கத்தில்வைக்கவிலையோ
பாழானவென்மனங்குவியவொருதந்திரம்
பண்ணுவதுனக்கருமையோ
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௯)

ஆசைக்கோரளவில்லையகிலமெல்லாங்கட்டி
யாளினுங்கடன்மீதிலே
யாணைசெலவேநினைவரளகேசனிகராக
வம்பொன்மிகவைத்தபேரும்

நேசித்துரசவாதவித்தைக்கலைந்திடவர்
நெடுநாளிருந்தபேரு
நிலையாகவேயினுங்காயகற்பந்தேடி
நெஞ்சுபுண்ணாவரெல்லாம்
யோசிக்கும்வேளையிற்பசிதீரவுண்பது
முறங்குவதுமாகமுடியு
முள்ளதேபோதுமினிநானெனக்குளறி
யொன்றைவிட்டொன்றுபற்றிப்
பாசக்கடற்குளேவீழாமன்மனதற்ற
பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௰)

பரிபூரணானந்த—முற்றிற்று. ஆ-௰௧.

# பொருள்வணக்கம்.

நித்தியமாய்நிர்மலமாய்நிட்களமாய்
நிராமயமாய்நிறைவாய்நீங்காச்
சுத்தமுமாய்த்தூரமுமாய்ச்சமீபமுமாய்த்
துரியநிறைசுடராயெல்லாம்
வைத்திருந்ததாரகமாயானந்த
மயமாகிமனவாக்கெட்டாச்
சித்துருவாய்நின்றவொன்றைச்சுகாரம்பப்
பெருவெளியைச்சிந்தைசெய்வாம். (௧)

யாதுமனநினையுமற்றநினைவுக்கு
நினைவாகியாதின்பாலும்
பேதமறநின்றுயிருக்குயிராகி
யன்பருக்கேபேரானந்தக்
கோதிலமுதூற்றரும்பிக்குணங்குறியொன்
றறத்தன்னைக்கொடுத்துக்காட்டு
நீதிபராபரமானசித்தாந்தப்
பேரொளியைச்சிந்தைசெய்வாம். (௨)

பெருவெளியாயைம்பூதப்பிறப்பிடமாய்ப்
பேசாதபெரியமோனம்
வருமிடமாய்மனமாதிக்கெட்டாத
பேரின்பமயமாஞானக்

குருவருளாற்காட்டிடவுமன்பரைக்கோத்
தறவிழுங்கிக்கொண்டப்பாலுந்
தெரிவரிதாய்க்கலந்துசெறிகப்பொருளந்தப்
பொருளினையுஞ்சிந்தைசெய்வாம். (௧)

இகபரமுமுயிர்க்குயிராயெனைத்தற்
றலைநறவையெந்தநாளுஞ்
சகபரிபூரணமானநிராலம்ப
கோசரத்தைத்துரியவாழ்வை
யகமகிழவருந்தேனைமுக்கனியைக்
கற்கண்டையமிர்தைநாடி
மொருமொகெனவிருவிழிநீர்முத்திறைப்பக்
கரமலர்கண்முகிழ்த்துநிற்பாம். (௨)

சாதிகுலப்பிறப்பிறப்புப்பந்தமுத்தி
யருவுருவத்தன்மைநாம
மேதுமின்றியெப்பொருட்குமெவ்விடத்தும்
பிரிவறநின்றியக்கஞ்செய்யுஞ்
சோதியைமாத்துவெளியைமனதவிழ
நிறைவானதுரியவாழ்வைத்
தீதில்பரமாம்பொருளைத்திருவருளே
நினைவாகச்சிந்தைசெய்வாம். (௩)

இந்திரசாலங்கனவுகானலினீ
ரெனவுலகமெமக்குத்தோன்றச்
சந்ததமுஞ்சிற்பரத்தாலழியாத
தற்பரத்தைச்சார்ந்துவாழ்க
புத்திமகிழுறநாளுந்தடையறவா
னந்தவெள்ளம்பொலிகவென்றே
வந்தருளுங்குருமௌனிமலர்த்தாளை
யனுதினமும்வழுத்தல்செய்வாம். (௪)

பொருளாகக்கண்டபொருளெவைக்குமுதற்
பொருளாகிப்போதமாகித்
தெருளாகிக்கருதுமன்பர்மிடிதீரப்
பருகவந்தசெழுந்தேனாகி
யருளானோர்க்ககம்புறமென்றுன்னாத
பூரணவானந்தமாகி

இருமரவிளங்குபொருளியாதந்தப்
பொருளினையாமிறைஞ்சிநிற்பாம் (எ)

அருமறையின்சிரப்பொருளாய்விண்ணவர்மா
முனிவர்சித்தராதியானோர்
தெரிவரியபூரணமாய்க்காரணங்கற்
பனைகடந்தசெல்வமாகிக்
கருதரியமலரின்மணமெள்ளிலெண்ணெ
யுடலுயிர்போற்கலந்தெந்நாளுந்
துரியநடுவூடிருந்தபெரியபொரு
ளியாததனைத்தொழுதல்செய்வாம் (அ)

விண்ணாதிபூதமெல்லாந்தன்னகத்தி
லடக்கிவெறுவெளியாய்ஞானக்
கண்ணாரக்கண்டவன்பர்கண்ணாரம்ட
யானந்தக்கடலாய்வேறொன்
றெண்ணாதபடிக்கிரங்கித்தாமுகச்
செய்தருளுமிறைமெய்யுந்தன்
றண்ணாருஞ்சாந்தவருடனைநினைந்து
கரமலர்கடலைமேற்கொள்வாம் (௯)

விண்ணிறைந்தவெளியாயென்மனவெளியிற்
கலந்தறிவாம்வெளியினூடுந்
தண்ணிறைந்தபேரமுதாய்ச்சதானந்த
மானபெருந்தகையேநின்பா
லுண்ணிறைந்தபேரன்பாலுள்ளுருகி
மொழிகுளறியுவகையாகிக்
கண்ணிறைந்தபுனலுகுப்பக்கரமுகிழ்ப்ப
நின்னருளைக்கருத்தில்வைப்பாம் (௰)

(வேறு.)

ஆதியந்தங்காட்டாதமுதலாயெம்மை
யடிமைக்காவளர்த்தெடுத்தவன்னைபோல
நீதிபெறுங்குருவாகிமனவாக்கெட்டா
நிச்சயமாய்ச்சொச்சமதாய்நிமலமாகி
வாதமிடுஞ்சமயநெறிக்கரியதாகி
மௌனத்தோர்பால்வெளியாய்வயங்காநின்ற
சோதியையென்னுயிர்த்துணையைநாடிக்கண்ணீர்
சொரியவிருசரங்குவித்துத்தொழுதல்செய்வாம் (௧௧)

தெய்வமறைமுடிவான பிரணவசொரூபியே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (௪)

ஐந்துவகையாகின்றபூதபேதத்திரு
ளாகின்றவாக்கைநீர்மேல்
லமர்கின்றகுமிழியெனநிற்கின்றதென்னநா
னறியாதகாலமெல்லாம்
புந்திமகிழுறவுண்டுடுத்தின்பமாவதே
போந்தநெறியென்றிருந்தேன்
பூராயமாகநினதருள்வந்துணர்த்தவிவை
போனவழிதெரியவில்லை
யெந்தநிலைபேசினுமிணங்கவில்லையல்லா
லிறப்பொடுபிறப்பையுள்ளே
யெண்ணினுநெஞ்சதுபகீரெனுந்துயிலுறா
திருவிழியுமிரவுபகலாய்ச்
செந்தழலின்மெழுகானதங்கமிவையென்கொலோ
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (௫)

காரிட்டவாணவக்கருவறையிலறிவற்ற
கண்ணிலாக்குழவியைப்போற்
கட்டுண்டிருந்தவெமைவெளியில்விட்டல்லலாங்
காப்பிட்டதற்கிசைந்த
பேரிட்டுமெய்யென்றுபேசுபாழ்ம்பொய்யுடல்
பெலக்கவிளையமுதமூட்டிப்
பெரியபுவனத்தினிடைபோக்குவரவுறுகின்ற
பெரியவிளையாட்டமைத்திட்
டேரிட்டதன்சுருதிமொழிதப்பினமனைவிட்
டிடருறவுறுக்கியிடர்தீர்த்
திரவுபகலில்லாதபேரின்பவீட்டினி
லிசைந்துதுயில்கொண்மினென்று
சீரிட்டவுலகன்னைவடிவானவெந்தையே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (௬)

குருமருவுபகையனைய காருத்தினடுவுட்
களிப்புதோய் செம்பனையயான்
காண்டகவிருக்க நீஞானவனன்மூட்டியே
கனிவுபெறவுள்ளுருக்கிப்
பருவமதறிந்து நின்னருளானகுளிகைகொடு
பரிசித்துவேதிசெய்து
பத்துமாற்றுத்தங்கமாக்கியேபணிகொண்ட
பக்ஷத்தையென்சொல்லுவே
னருமைபெறுபுகழ்பெற்றவேதாந்தசித்தாந்த
மாதியாமந்தமீது
மத்துவிதநிலையராவென்னையாண்டுன்னடிமை
யானவர்களறிவினூடுந்
திருமருவுகல்லாலடிக்கீழும்வளர்கின்ற
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (எ)

கூடுதலுடன்பிரிதலற்றுநிர்த்தொந்தமாய்க்
குவிதலுடன்விரிதலற்றுக்
குணமற்றுவரவினொடுபோக்கற்றுநிலையான
குறிபற்றுமலமுமற்று
நாடுதலுமற்றுமேல்கீழ்நடுப்பக்கமென
நண்ணுதலுமற்றுவிந்து
நாதமற்றைவகைப்பூதபேதமுமற்று
ஞாதுருவின்ஞானமற்று
வாடுதலுமற்றுமேலொன்றற்றிரண்டற்று
வாக்கற்றுமனமுமற்று
மன்னுபரிபூரணச்சுகவாரிதன்னிலே
வாய்மடுத்துண்டவசமாய்த்
தேடுதலுமற்றவிடநிலையென்றமௌனியே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (அ)

தாராதவருளெலாந்தந்தருளமௌனியாய்த்
தாயனையகருணைகாட்டித்
தாளிணையென்முடிசூட்டியறிவிற்சமாதியே
சாசுவதசம்ப்ரதாய

ணைந்தைதவடவாற்பரமகுருவாழ்கவாழவரு
ளியநந்திமரபுவாழ்க
வென்றடியர்மனமகிழவேதாகமத்துணி
பிரண்டில்லையொன்றென்னவே
வந்தகுருவேவீறுசிவஞானசித்திநெறி
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே (௨)

ஆதிக்கநல்கினவராரிந்தமாயைக்கெ
னறிவன்றியிடமில்லையோ
வந்தரப்புஷ்பமுங்கானலின்னீருமோ
ரவசரத்துபயோகமோ
போதித்தநிலையையுமயக்குதேயபயநான்
புக்கவருடோற்றிடாமற்
பொய்யானவுலகத்தைமெய்யாநிறுத்தியென்
புந்திக்குளிந்திரசாலஞ்
சாதிக்குதேயினைவெல்லவுமுபாயநீ
தந்தருள்வதென்றுபுகல்வாய்
சண்மதஸ்தாபனமும்வேதாந்தசித்தாந்த
சமரசநிர்வாகநிலையு
மாதிக்கொடண்டப்பரப்பெலாமறியவே
வந்தருளுஞானகுருவே
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் (௩)
மரபில்வருமௌனகுருவே

மின்னையபொய்யுடலைநிலையென்றுமையிலகு
விழிகொண்டுமையல்பூட்டு
மின்னார்களின்பமேமெய்யென்றும்வளர்மாட
மேல்வீடுசொர்க்கமென்றும்
பொன்னையழியாதுவளர்பொருளென்றுபோற்றியிப்
பொய்வேஷமிகுதிகாட்டிப்
பொறையறிவுதுறவீதலாதிநற்குணமெலாம்
போக்கிலேபோகவிட்டுத்
தன்னிகரிலோபாதியாம்பேய்பிடித்திடத்
தரணிமிசைலோகாயுதன்
சமயநடைசாராமல்வேதாந்தசித்தாந்த
சமரசசிவானுபூதி

முன்னவொருசொற்கொண்டெனைத்தடுத்தாண்டவன்பின் - - - *
வாழ்வித்தருனகுருவே - - - *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் - - *
மரபில்வருமௌனகுருவே. - - (௪)

பேரானகமிருக்கின்றசாலையிடைவேண்டுவ - - *
டசித்தற்கிருக்குமதுபோற் - - *
புருஷர்பெறுதர்மாதிவேதமுடனாகமம் - *
புகலுமதினாலம்பயன் - - *
ஞானநெறிமுக்யநெறிகாட்சியனுமானமுத - - *
ஞானவிதங்கடேர்ந்து - - - *
நானெனக்குளறுபடைபுடைபெயர்த்திடவு - - *
நான்குசாதனமுமோர்ந்திட் - - *
டானநெறியாஞ்சரியையாதிசோபானமுற் - *
றனுபக்ஷசம்புபக்ஷ - - - *
மாமிருவிகற்பமுமாயாதிசேவையு - - *
மறிந்திரண்டொன்றென்னுமோர் - - *
மானதவிகற்பமறவென்றநிற்பதுநமது - - *
மரபென்றபரமகுருவே - - *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் - - *
மாபில்வருமௌனகுருவே. - - (௫)

இல்லாதவறிவுமேற்கேளாதகேள்வியும் - - *
கருணைசிறிதேனுமில்லாக் - - *
காட்சியுங்கலைகளவுகட்காமமாட்சியாக் - - *
காதலித்திடுநெஞ்சமும் - - - *
பொல்லாதபொய்ம்மொழியுமல்லாதநன்மைகள் - *
பொருந்துகுணமேதுமறியேன் - - *
புருஷர்வடிவானதேயல்லாதுகனவிலும் - - *
புருஷார்த்தமேதுமில்லே - - - *
னெல்லாமறிந்தநீயறியாததன்றெனக் - - *
கெவ்வண்ணமுய்வண்ணமோ - - *
விருளையிருளென்றவர்க்கொளிதாரகம்பெறு - - *
மெனக்குநின்னருடாரகம் - - - *
வல்லானெனும்பெயருனக்குள்ளதேயிந்த - - *
வஞ்சகனையாளநினையாய் - - *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் - - *
மாபில்வருமௌனகுருவே. - - - (௬)

கரிணிகயிலங்குபுலி பசுவொடுகுலவுநின்
கண்காணமெய்யானை நீ
கைகாட்டவுங்கையாலெனகிடுக்கெனப்பெரிய
கட்டைமிகவேவந்திவருமே
போனகமமைந்ததெனவக்காமதேனு நின்
பொன்னடியினின்றுசொலும்ம
புவிராஜர்கவிராஜர்தவராஜரென்றுனைப்
போற்றிஜயபோற்றியென்பார்
ஞானகுருஞரமுகங்கண்ட போதிலே
நவநாதசித்தர்களுமுன்
நட்பினைவிரும்புவார்சுகர்வாமதேவர்முதன்
ஞானிகளுமுனைமெச்சுவார்
வானகமுமண்ணகமும்வந்தெதிர்வணங்கிடுமுன்
மகிமையதுசொல்லவெளிதோ
மந்த்ராகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (எ)

சருகுசலட்சணிகளொருகோடியல்லாத்
சகோரபட்சிகள்போலவே
தவளநிலவொழுகமிர்தத்தையுண்டழியாத
தன்மையரனந்தகோடி
யிருவினைகளற்றிரவுபகலென்பதறியாத
ஏகாந்தமோனஞான
வின்பநிஷ்டையர்கோடிமணிமந்த்ரசித்திநிலை
யெய்தினர்கள்கோடிசூழக்
குருமணியிழைத்திட்டசிங்காதனத்தின்மிசை
கொலுவீற்றிருக்குநின்னைக்
கும்பிட்டனந்தமுறைதெண்டனிட்டென்மனக்
குறையெலாந்தீரும்வண்ணம்
மருமலரெடுத்துனிருதாளையர்ச்சிக்கவெனை
வாவென்றழைப்பதெந்நாள்
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (அ)

ஆங்காரமானகுலவேடவெம்பேய்பாழ்த்த
வாணவத்தினும்வலிதுகா
ணன்றிவினைமயக்கிநடுவறியவொட்டாதி
யாதொன்றுதொடினுமதுவாய்த்

ஆங்காரமொழிபேசுமரிகரப்பிரமாதி ..... *
 தம்மொடுசமானமென்னுந் ..... ..... *
தடையற்றதேரிலஞ்சுருவாணிபோலவே ..... ... *
 தன்னிலசையாதுநிற்கு ..... ..... ..... *
மீங்காரனக்குநிகரென்னப்ரதாபித் ..... ..... *
 திரானுகாரமாகி ..... ..... ..... *
யிதயவெளியாங்கணுந்தன்னரசுநாடுசெய் ..... *
 திருக்குமிதமெனுடேநரமும் ..... ..... ..... *
வாங்காவிலாவடிமைபாராடமுடியுமோ ..... ..... *
 மௌனோபதேசகுருவே ..... ..... ..... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ..... ..... *
 மரபில்வருமௌனகுருவே ..... ... (௯)

பற்றுவெகுவிதமாகியொன்றைவிட்டொன்றனைப் ..... *
 பற்றியுழல்கிருமிபோலப் ..... ..... *
பாழ்ஞ்சிந்தைபெற்றநான்வெளியாகநின்னருள் ..... *
 பகர்ந்துமறியன்றுவிதமோ ..... ..... *
சிற்றறிவகன்றியுமெவனுமொருமொழி ..... ..... *
 திடுக்கென்றுரைத்தபோது ..... ..... *
சிந்தைசெவியாகவேபறையறையவுதரவெந் ..... *
 தீநெஞ்சமளவளாவ ..... ..... ..... .. *
வுற்றுணரவுணர்வற்றுன்மத்தவெறியினர்போல ..... *
 வுளறுவேன்முத்திமார்க்க ..... ..... ..... *
முணர்வதெப்படியின்பதுன்பஞ்சமானமா ..... ..... *
 யுறுவதெப்படியாயினு ..... ..... ..... *
மற்றெனக்கையநீசொன்னவொருவார்த்தையிணை ..... *
 மலையிலக்கெனநம்பினேன் ..... ..... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ..... ..... *
 மரபில்வருமௌனகுருவே ..... ..... ..... (௰)

மௌனகுருவணக்கம் - முற்றுப்பெற்றது-ஆக சய௰௫.

---

## கருணாகரக்கடவுள்.

நிர்க்குணநிராமயநிரஞ்சனநிராலம்ப ..... ..... *
 நிர்விஷயகைவல்யமா ..... ..... ..... *
நிஷ்களவசங்கசஞ்சலரகிதநிர்வசன ..... ..... ..... *
 நிர்த்தொந்தநித்தமுக்த ..... ..... ..... *

தற்பரவிஸ்வாதீதவ்யோமபரிபூரண
சதானந்தஞானபகவ
சம்புசிவசங்கரசர்வேசவென்றுநான்
சர்வகாலமுநினைவனோ
அற்புதவசீகரநிவர்த்தியெனுமன்பருக்
கானந்தமூர்த்தியான
வத்துவிதநிச்சயசொரூபசாக்ஷாத்கார
வனுபூதியனுசூதமுங்
கற்பனையறக்காணமுக்கணுடன்வடநிழற்
கண்ணூடிருந்தகுருவே
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௧)

மண்ணாதியைந்தொடுபுறத்திலுளகருவியும்
வாக்காதிசுரோத்ராதியும்
வளர்கின்றசப்தாதிமனமாதிகலையாதி
மன்னுசுத்தாதியுடனே
தொண்ணூற்றொடாறுமற்றுள்ளனவுமௌனியாய்ச்
சொன்னவொருசொற்கொண்டதே
தூவெளியதாயகண்டானந்தசுகவாரி
தோற்றுமதையென்சொல்லுவேன்
பண்ணுருமிசையிலேபொடிப்படித்தருட்
பான்மைநெறிநின்றுதவறாப்
பக்குவவிசேஷராய்நெக்குநெக்குருகிப்
பணிந்தெழுந்திருகைகூப்பிக்
கண்ணாறுகரைபுரளநிற்றவன்பரையெலாங்
கைவிடாக்காட்சியுறவே
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௨)

எல்லாமுனடிமையேயெல்லாமுனுடைமையே
யெல்லாமுனுடையசெயலே
யெங்கணும்வியாபிநீயென்றுசொலுமியல்பென்
றிருக்காதிவேதமெல்லாஞ்
சொல்லாமுழக்கியதுமிக்கவுபகாரமாஞ்
சொல்லிறந்தவரும்விண்டு
சொன்னவையுமிவைநல்லகுருவானபேருந்
தொகுத்தநெறிதானுமிவையே

இல்லாமலில்லையென நன்றாயறிந்தே
யறிந்தபடி நின்றுசுக நா
டாகாதவண்ணமேயிவ்வண்ணமாயினை
னொருவுநினதருளல்லவே
கல்லாதவறிஞனுக்குள்ளமுணர்த்திலை
கதிக்குவகையேதுபுகலாய்
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௩)

பட்டப்பகற்பொழுதையிருளென்றமருளர்தம்
பக்ஷமோவெனதுபக்ஷம்
பார்த்தவிடமெங்கணுஞ்சாந்தநிலைகுலையாது
பரமவெளியாகவொருசொற்
றிட்டமுடன்மௌனியாயருள்செய்திருக்கவுந்
தேசராமலாசகநான்
சிறுவீடுகட்டியதிணைசோற்றையுண்டுண்டு
தேக்குசிறியார்கள்போல
நட்டணையதாக்கற்றகல்வியும்விவேகமு
நண்ணிலயமாகவுன்னி
நானென்றுநீயென்றிரண்டில்லையென்னவே
நடுவேமுளைத்தமனதைக்
கட்டவறியாமலேவாடினேனெப்போது
கருணைக்குரித்தாவனோ
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௪)

மெய்விடாநாவுள்ளமெய்யருளிருந்துநீ
மெய்யானமெய்யையெல்லா
மெய்யெனவுணர்த்தியதுமெய்யிதற்கையமிலை
மெய்யேதுமறியாவெறும்
பொய்விடாப்பொய்யினேனுள்ளத்திருந்துதான்
பொய்யானபொய்யையெல்லாம்
பொய்யெனுவண்ணமேபுகலவைத்தாயெனிற்
புன்மையேனென்செய்குவேன்
மைவிட்டொழுநீலகண்டகுருவேவிஷ்ணு
வடிவானஞானகுருவே
மலர்மேவிமறையோதுநான்முகக்குருவே
மதங்கடொறுநின்றகுருவே

கைவிடாதேயென்றவன்பருக்கன்பாய்க் ... ... *
கருத்தூடுணர்த்துகுருவே ... ... *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு ... ... *
கருணாகரக்கடவுளே ... ... ... (௫)

பண்ணேனுனக்கானபூசையொருவடிவிலே ... *
பாவித்திறைஞ்சவாங்கே ... ... *
பார்க்கின்றமலரூடுநீயேயிருத்தியப் ... ... *
பனிமலரெடுக்கமனமு ... ... *
நண்ணேனலாமலிருகைதான்குவிக்கவெனி ... ... *
னாணுமென்னுளநிற்றநீ ... ... ... *
நான்கும்பிடும்போதரைக்கும்பிடாதலா ... *
னான்பூசைசெய்யன்முறையோ ... ... *
விண்ணேவிண்ணாதியாம்பூதமேநாதமே ... ... *
வேதமேவேதாந்தமே ... ... ... *
மேதக்ககேள்வியேகேள்வியாம்பூமிக்குள் — ... *
வித்தேயவித்தின்முளையே ... ... *
கண்ணேகருத்தேயென்னெண்ணேயெழுத்தே ... *
கதிக்கானமோனவடிவே ... ... *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு ... ... *
கருணாகரக்கடவுளே ... ... ... (௬)

சந்ததமும்வேதமொழியாதொன்றுபற்றினது ... *
தான்வந்துமுற்றுமெனலாற் ... ... *
சகமீதிருந்தாலுமரணமுண்டென்பது ... ... *
சதாநிஷ்டர்நினைவதில்லை ... ... ... *
சிந்தையறியாக்கிதுபோதிப்பதல்லவே ... ... *
செப்பினும்வெகுதர்க்கமாந் ... ... *
திவ்யகுணமார்க்கண்டர்சுகராதிமுனிவோர்கள் ... *
சித்தாந்தநித்யரலவோ ... ... *
இந்த்ராதிதேவதைகள்பிரமாதிகடவுள ... ... *
ரிருக்காதிவேதமுனிவ ... ... ... *
ரெண்ணரியகணநாதர்நவநாதசித்தர்க ... ... *
ளிரவிமதியாதியோர்கள் ... ... *
கந்தருவர்கின்னரர்கண்மற்றையர்களியாவருங் ... *
கைகுவித்திடுதெய்வமே ... ... ... *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு ... ... *
கருணாகரக்கடவுளே ... ... ... (௭)

ஆளுநீயாமெனத்தடையிலிகொடுத்தென்கர்ம
துஷ்டதேவதைகளில்லை
அரியநிறைசாந்தேவதையாருணக்கே
தொழும்பனென்றபிஷேகநீர்
ருள்ளுறையிலென்றுவிரைநைவேத்தியம்ப்ராண
மென்றுங்குமதிதூ...தீப
மொருகாலமன்றிதுசதாகாலபூசையா
வொப்புவித்தென்கருணைகூர்
தெள்ளிமறைவடியிட்டமுதப்பிழம்பே
தெளிந்ததேனேசீனியே
திவ்யரசமியாவுந்திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவானந்தமே
கள்ளனறிவூடுமெள்ளமெள்ளவெளியாய்க்
கலக்கவருநல்லுறவே
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (அ)

உடல்குழையவென்பெலாநெக்குருகவிழிநீர்க
ளூற்றெனவெதும்பியூற்ற
ஊசிகாந்தத்தினைக்கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுன்னிப்
படபடெனநெஞ்சம்பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
பனிமதிமுகத்திலேநிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனையகைவிரித்துக்கூப்பி
வாமெய்யவானிலின்ப
மழையேமழைத்தாரைவெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்துங்
கடன்மடைதிறந்தனையவன்பரன்புக்கெளியை
கன்னெஞ்சனுக்கெளியையோ
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (௯)

இங்கற்றபடியங்குமெனவறியநல்லறிஞ
ரெக்காலமுஞ்சுகவ்வா
வின்சொறவறார்பொய்மையாமிழுக்குணையா
ரிரங்குவார்கொலைகள்பயிலார்

கேட்டதுகொடுத்துவர நிற்கவைப்பீர் பிச்சை *
கேட்டுப்பிழைப்போனையுங் *
கிரீடபதியாக்குவீர் கற்பாந்தவெள்ளமொரு *
கேணியிடைக்குறுகவைப்பீர் *
கோட்டினையெடுத்தாயிரத்தெட்டுமாற்றாக *
வொளிவிடும்பொன்னாக்குவீர் *
நாகனுமிளைப்பாறயோகதண்டத்திலே *
யுலகுசுமையாகவருளான் *
மீட்டிடவும்வல்லநீரென்மனக்கல்லையனன் *
மெழுகாக்கிவைப்பதரிதோ *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற *
வித்தகச்சித்தர்கணமே (௨)

பாரொடுநல்லீராதியொன்றோடொன்றாகவே *
பற்றிலயமாகும்போது *
பரவெளியின்மருவுவீர் கற்பாந்தவெள்ளம் *
பரந்திடினதற்குமீதே *
நீரினுறைவண்டாய்த் துவண்டுசிவயோகநிலை *
நிற்பீர்விகற்பமாகி *
நெடியமுகிலேழும்பரந்துவருஷிக்கிலோ *
நிலவுமதிமண்டலமீதே *
பூரணவிளங்குவீர் பிரமாதிமுடிவில்விடை *
யூர்தியருளாலுலவுவீ *
றுலகங்கள்கீழ்மேலதாகப்பெருங்காற் *
றுலாவினற்றாரணையினேன் *
மேருவெனவசையாமனிற்கவல்லீருருமம *
மேதக்கசித்தியெளிதோ *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற *
வித்தகச்சித்தர்கணமே (௩)

எண்ணரியபிறவிதனின் மானிடப்பிறவிதா *
னியாதினும்மரிதரிதுகா *
ணிப்பிறவிதப்பினாலெப்பிறவிவாய்க்குமோ *
வேதுவரும்மாவறிகிலேன் *
கண்ணகனிலத்துநானுள்ளபொழுதேயருட் *
ககனவட்டத்திநின்று *
காலூன்றிநின்றுபொழியானந்தமுகிலொடு *
கலந்துமதியவசமுறவே *

பன்னுவதுநன்மையிந்நிலைபதியுமட்டுமே - - *
பதியாயிருந்ததேகப் - - - - *
பவுரிகுலையாமலேகௌரிகுண்டலியாயி - - *
பண்ணவிதனைருளினாலே - - - - *
விண்ணிலவுமதியமுதமொழியாதுபொழியவே - *
வேண்டுமேனுமதடிமைநான் - - *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற - - *
வித்தகச்சித்தர்கணமே - - - (௪)

பொய்திகழுமுலகநடையென்சொல்கேனென்சொல்கேன் *
பொழுதுபோக்கேதென்னிலோ - - *
பொய்யுடனிமித்தம்புசிப்புக்கலைந்திடல் - - *
புசித்தபின்கண்ணுறங்கல - - - *
கைதவமலாமலிதுசெய்தவமதல்லவே - - *
கண்கெட்டபேர்க்கும்வெளியாய்க் - - *
கண்டறிதுவிண்டிதைக்கண்டித்துநிற்றலெக் - - *
காலமோவதையறிகிலேன் - - - *
மைதிகழுமுகிலினங்குடைநிழற்றிடவட்ட - - *
வரையினிடுசெம்பொன்மேரு - - *
மால்வரையின்முதுகூடும்யோகதண்டக்கோல் - - *
வரைந்துஜயவிருதுகாட்டி - - - *
மெய்திகழுமஷ்டாங்கயோகபூமிக்குள்வளர் - - *
வேந்தமாகுணசாந்தரோ - - - *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற - - *
வித்தகச்சித்தர்கணமே - - - (௫)

கெசதுரகமுதலானசதுரங்கமணமாதி - - *
கேள்வியினிசைந்துநிற்பக் - - *
கெடிகொண்டதலமாறுமும்மண்டலத்திலுங் - - *
கிள்ளாக்குசெல்லமிக்க - - - - *
தேசவிதமதாய்நின்றநாதங்களோலிடச் - - *
சிங்காசனத்திபர்களாய்த் - - - - *
திக்குத்திகந்தமுப்பூரணமதிக்குடை - - *
திகழ்ந்திடவசந்தகால - - - *
மிசையமலர்மீதுறைமணம்போலவானந்த - - *
மிகையமேற்கொள்ளும்வண்ண - - *
மென்மறக்குமழியாதநிலை ஜயோகமா - - *
யிருந்தாலுமவர்களெலாம் - - - *

விஜயஜயஜயவென்னவாசிசொலவெகொலு
விருக்குநும்பெருமையெளிதோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே (௬)

ஆணிலைபெண்ணிலையென்போலவொருபேதை
யகிலத்தின்மிசையுள்ளதோ
வாடியகறங்குபோலோடிழுழல்சிந்தையை
யடக்கியொருகணமேனும்யான்
காணிலேன்றிருவருளையல்லாதுமௌனியாய்க்
கண்மூடியோடுமூச்சைக்
கட்டிக்கலாமதியைமூட்டவேமூலவெங்
கனலினையெழுப்பநினைவும்
பூணிலேனிற்றைநாட்கற்றதுங்கேட்டதும்
போக்கிலேபோகவிட்டுப்
பொய்யுலகநாயினேனாயினுங்கடையான
புன்மையேனின்னமின்னம்
வீணிலேயலையாமன்மலையிலக்காகநீர்
வெளிப்படத்தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே (௭)

கன்னலமுதெனவுமுக்கனியெனவும்வாயூறு
கண்டெனவுமடியெடுத்துக்
கடவுளர்கடந்ததலமுழுதுமேபேய்போற்
கருத்திலெழுகின்றவெல்லா
மென்னதறியாமையறிவென்னுமிருபகுதியா
லீட்டுதமிழென்றமிழினுக்
கின்னல்பகராதுலகமாராமைமேலிட்
டிருத்தலாலித்தமிழையே
சொன்னவனியாவனவன்முத்திசித்திகளெலாந்
தோய்ந்தநெறியேபடித்தீர்
சொல்லுமெனவவர்நீங்கள்சொன்னவவையிற்சிறிது
தோய்ந்தகுணசாந்தனெனவே
மின்னல்பெறவேசொல்லவச்சொல்கேட்டடிமைமனம்
விகசிப்பதெந்தநாளோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே (௮)

பொற்பினெடுங்கைகாலில்வள்ளுகிர்படைத்தலாற்
போந்திடையொடுக்கமுறலாற்
பொலிவானவெண்ணீறுபூசியேயருள்கொண்டு
பூரித்தவெண்ணீர்மையா
லெற்படவிளங்குகணத்திலிமையாவிழி
யிசைந்துமேமேனோக்கமுறலா
லிரவுபகலிருளானகனதந்திபடநாறி
யிதயங்களித்திடுதலாற்
பற்பலவிதங்கொண்டபுலிகலையினுரியது
படைத்துப்ப்ரதாபமுறலாற்
பனிவெயில்கள்புகுதாமனெடியவான்றொடர்நெடிய
பருமாவனங்களாரும்
வெற்பினிடையுறைதலாற்றவராஜசிங்கமென
மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௯)

கல்லாதபேர்களேநல்லவர்கணல்லவர்கள்
கற்றுமறிவில்லாதவென்
கர்மத்தையென்சொல்வேன்மதியையென்சொல்லுவேன்
கைவல்யஞானநீதி
நல்லோருரைக்கிலோகர்மமுக்கியமென்று
நாட்டுவேன்கர்மமொருவ
னாட்டினாலேபழையஞானமுக்கியமென்று
நவிலுவேன்வடமொழியிலே
வல்லானொருத்தன்வரவுந்த்ராவிடத்திலே
வந்ததாவிவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரினங்ஙனேவடமொழியின்
வசனங்கள்சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையுமருட்டிவிடவகைவந்த
வித்தையென்முத்திதருமோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே (௰)

சித்தர்கணம்-முற்றுப்பெற்றது-, ஆ௨காகா.



# ஆனந்தமானபரம்.

கொல்லாமையெத்தனைகுணக்கேட்டைநீக்குமக்
குணமொன்றுமொன்றிலென்பாற்
கோரமெத்தனைபக்ஷபாதமெத்தனைவன்
குணங்களெத்தனைகொடியபாழ்ங்
கல்லாமையெத்தனையகந்தையெத்தனைமனக்
கள்ளமெத்தனையுள்ளசற்
காரியஞ்சொல்லிடினுமறியாமையெத்தனை
கதிக்கென்றமைத்தவருளிற்
செல்லாமையெத்தனைவிர்தாகோஷ்டியென்னிலோ
செல்வமெத்தனைமுயற்சி
சிந்தையெத்தனைசலனமிந்த்ரஜாலம்போன்ற
தேகத்தில்வாஞ்சைமுதலா
யல்லாமையெத்தனையமைத்தனையுனக்கடிமை
யானேனிலைக்குமோதான்
வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (௧)

தெருளாகிமருளாகியுழலுமனமாய்மனஞ்
சேர்ந்துவளர்சித்தாகியச்
சித்தெலாஞ்சூழ்ந்தசிவசித்தாய்விசித்ரமாய்த்
திரமாகிநானாவிதப்
பொருளாகியப்பொருளையறிபொறியுமாகியைம்
புலனுமாயைம்பூதமாய்ப்
புறமுமாயகமுமாய்த்தூரஞ்சமீபமாய்ப்
போக்கொடுவரத்துமாகி
யிருளாகியொளியாகிநன்மைதீமையுமாகி
யின்றாகிநாளையாகி
யென்றுமாயொன்றுமாய்ப்பலவுமாய்யாவுமா
யிவையல்லவாயநின்னை
யருளாகிநின்றவர்களறிவதல்லாலொருவ
ரறிவதற்கெளிதாகுமோ
வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (௨)

மாறுபடுதர்க்கந்தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின்பொருட்டாக

பெருமையொடுசிறுமையுமருமையுடனெளிமையும்
பெண்ணினுடனாணுமற்று
நித்தமுமநித்தமுமஞ்சனநிரஞ்சனமு
நிஷ்களமுஞ்சகளமு
நீதியுமநீதியுமாதியோடந்தமு
நிர்விஷயவிஷயவடிவு
மத்தனையுநீயலதுதனித்தனையுமில்லையெனின்
யாங்களுனையன்றியுண்டோ
அண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (௫)

காராருமாணவக்காட்டைக்களைந்தறக்
கண்டகங்காளமென்னுங்
கல்லைப்பிளந்துநெஞ்சகமானபூமிவெளி
காணத்திருத்திமேன்மேற்
பாராதியறியாதமோனமாம்வித்தைப்
பதித்தன்புநீராகவே
பாய்ச்சியதுபயிராகுமட்டுமோமாயையவன்
பறவையணுகாதவண்ணம்
நேராகநின்றுவிளைபோகம்புசித்துவண்ட
நின்னன்பர்கூட்டமெய்த
நினைவின்படிக்குநீமுன்னின்றுகாப்பதே
நின்னருட்பாரமென்று
மாராருமறியாதஞானவெளியில்வெளி
யாகின்றதுரியமயமே
யண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (௬)

வானாதிபூதமாயகிலாண்டகோடியாய்
மலையாகிவளைகடலுமாய்
மதியாகியிரவியாய்மற்றுளவெல்லாமாகி
வான்கருணைவெள்ளமாகி
நானாகிநின்றவனுநீயாகிநின்றிடவு
நானென்பதற்றிடாதே
நானெனக்குளறிநானாவிகாரியாய்
நானறிந்தறியாமையாய்ப்
போனாலதிட்டவழிவெல்லவெளிதோபகற்
பொழுதுபுகுமுன்கண்மூடிப்

பொய்த்துயில்கொள்வான்றனையெழுப்பல்சமோவினிப் - - *
போதிப்பதெந்தநெறியை - - - *
யானாலுமென்கொடுமையனியாயமனியாய - - *
மார்பாலெடுத்துமொழிவே - - - *
னண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி - - *
யானந்தமானபரமே. - - - - (எ)

பொய்யினேன்புலையினேன்கொலையினேனின்னருள் - *
புலப்படவறிந்துநிலையாப் - - - - *
புன்மையேனல்லாததன்மையேனன்மையோர் - *
பொருளலாப்பொருளைநாடும் - - *
வெய்யனேன்வெகுளியேன்வெறியனேன்சிறியனேன் - *
வினையினேனென்றெனைநீ - - - *
விட்டுவிடநினைவையேற்றட்டழிவதல்லாது - - *
வேறுகதியேதுபுகலாய் - - - *
துய்யனேமெய்யனேயுயிரினுக்குயிரான - - *
துணைவனேயிணையொன்றிலாத் - - *
துரியனேதுரியமுங்காணாவதீதனே - - - *
சுருதிமுடிமீதிருந்த - - - - *
ஐயனேயப்பனேயெனுமறிஞரறிவைவிட் - - *
டகலாதகருணைவடிவே - - - *
யண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி - - *
யானந்தமானபரமே - - - (அ)

எத்தனைவிதங்கடான்கற்கினுங்கேட்கினுமென் - *
னிதயமுமொடுங்கவில்லை - - - *
யானெனுமகந்தைதானெள்ளளவுமாறவில்லை - - *
யாதினுமபிமானமென் - - - *
சித்தமிசைகுடிகொண்டதீமையொடாக்கமென் - - *
ஜென்மத்துநானறிகிலேன் - - - *
சீலமொடுதவவிரதமொருகனவிலாயினுந் - - *
தெரிசனங்கண்டுமறியேன் - - - - *
பொய்த்தமொழியல்லான்மருந்துக்குமெய்ம்மொழி - *
புகன்றிடேன்பிறர்கேட்கவே - - - *
போதிப்பதல்லாதுசும்மாவிருந்தருள் - - *
பொருந்திடாப்பேதைநானே - - - *
யத்தனைகுணக்கேடர்கண்டதாக்கேட்டதா - - *
வவனிமிசையுண்டோசொலா - - - - *

வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி ... ... *
யானந்தமானபரமே ... ... ... (கூ)

ஏக்காலமுந்தனக்கென்னவொருசெயலிலா ... *
வேழைநீயென்றிருந்தேட் ... ... *
டெனதாவியுடல்பொருளுமொளியாய்வந்துகை ... *
யேற்றுநமதென்றவன்றே ... ... *
பொய்க்காலதேசமும்பொய்ப்பொருளில்வாஞ்சையும் ... *
பொய்யுடலைமெய்யென்னலும் ... ... *
பொய்யுறவுபற்றலும்பொய்யாகுநானென்னல் ... *
பொய்யினும்பொய்யாகையால் ... ... *
மைக்கவிருட்டனையவிருளிலையிருவினைகள் ... *
வந்தேறவழியுமிலை ... ... ... *
மனமிலலையம்மனத்தினமில்லைவேறுமொரு ... ... *
வரவில்லைபோக்குமில்லை ... ... *
யக்காலமிக்காலமென்பதிலையெல்லா ... ... ... *
மதீதமயமானதன்றோ ... ... ... *
வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி ... *
யானந்தமானபரமே ... ... ... (ய)

ஆனந்தமானபரம் - முற்றுப்பெற்றது. ஆ. எக.

---

## சுகவாரி.

இன்னமுதுகனிபாகுகற்கண்டுசீனிதே ... *
னென்றுசித்திடவலியவந் ... ... ... *
தின்பங்கொடுத்தநினையெந்நேரநின்னன்ப ... ... *
ரிடையறாதுருகிநாடி ... ... ... *
யுன்னியகருத்தவிழவுள்குளறியுடலெங்கு ... ... *
மோய்ந்தயர்ந்தவசமாகி ... ... ... *
யுணர்வரியபேரின்பவனுபூதியுணர்விலே ... ... *
யுணர்வார்களுள்ளபடிகாண ... ... *
கன்னிகையொருத்திசிற்றின்பம்வேம்பென்னினுங் ... *
கைக்கொள்வள்பக்குவத்திற் ... ... ... *
கணவனருள்பெறின்முன்னைசொன்னவாறென்னெனக் ... *
கருதிநகையாளதுபோற் ... ... ... *
சொன்னபடிகேட்குமிப்பேதைக்குநின்கருணை ... ... *
தோற்றிச்சுகாரம்பமாஞ் ... ... *

கண்டிந்நெறியெனத்திருவுளக்கனிவின்றி ... *
    கனிவாய்திறந்துமொழியாமறைப் ... ... *
பெற்றவனுமல்லன்பெருகவனுமல்லேன் ... *
    பெருக்கத்தவித்துளறியே ... *
பெண்ணீர்மையென்னவிருகண்ணீர்நிறைத்துநான் ... *
    பேய்போலிருக்கவுலகஞ் ... ... ... *
சுற்றிநகைசெய்யவேயலையவிட்டாயெனிற் ... *
    சொல்லவினிவாயுமுண்டோ ... ... *
சுத்தநிர்க்குணமானபரதெய்வமேயாஞ் ... ... *
    சோதியேசுகவாரியே ... (௬)

அரும்பொனேமணியேயெனன்பேயெனன்பான... ... *
    வறிவேயெனறிவிலூறு ... *
மானந்தவெள்ளமேயென்றென்றுபாடினே ... *
    னாடினேனாடிநாடி ... ... ... *
விரும்பியேகூவினேனுலறினேனலறினேன் ... *
    மெய்சிலிர்த்திருகைகூப்பி ... ... *
விண்மாரியெனவெனிருகண்மாரிபெய்யவே ... ... *
    வேசற்றயர்ந்தேனியா ... ... ... *
னிருப்புநேர்நெஞ்சகக்கள்வனானாலுமுனை ... *
    யிடைவிட்டுநின்றதுண்டோ ... ... *
வென்றுநீயன்றுநானுன்னடிமையல்லவோ ... *
    யாதேனுமறியாவெறுந் ... ... ... *
துரும்பனேனென்னினுங்கைவிடுதனீதியோ ... *
    தொண்டரொடுகூட்டுகண்டாய் ... ... ... *
சுத்தநிர்க்குணமானபரதெய்வமேயாஞ் ... ... *
    சோதியேசுகவாரியே ... ... ... (௭)

பாராதியண்டங்களத்தனையும்வைக்கின்ற ... ... *
    பரவெளியினுண்மைகாட்டிப் ... *
பற்றுமனவெளிகாட்டிமனவெளியினிற்றோய்ந்த ... *
    பாவியேன்பரிசுகாட்டித் ... ... *
தாராளமாய்நிற்கநிச்சிந்தைகாட்டிச் ... *
    சதாகாலநிட்டையெனவே ... ... *
சகசநிலைகாட்டினைசுகாதீதநிலையுந் ... ... *
    தனைக்காட்டநாள்செல்மோ ... ... *
தாராரவெண்ணருமனந்தகோடிகணின்று ... ... *
    காலூன்றிமழைபொழிதல்போற் ... ... *

கால்வீசிமின்னிப்படர்ந்துபரவெளியெலாங் ... *
கம்பியானந்தவெள்ளஞ் ... ... *
சேராதுபொழியவேகருணையின்முழங்கியே ... *
தொண்டரைக்கூவுமுகிலே ... ... *
சுத்தநிர்க்குணமானபரதெய்வமேபரஞ் ... ... *
சோதியேசுகவாரியே ... ... ... (அ)

பேதித்தசமயமோவொன்றுசொனபடியொன்று ... *
பேசாதுறவாகியே ... ... ... *
பேசாதபெரியோர்கணிருவிகற்பத்தினாற் ... ... *
பேசார்கள்பரமகுருவாய்ப் ... ... ... *
போதிக்குமுக்கணிறைந்நர்மையாய்க்கைக்கொண்டு ... *
போதிப்பசாச்சறிவிலே ... ... ... *
போக்குவரவற்றவின்பநீக்கமறவசனமாய் ... ... *
போதிப்பதெவனையனே ... ... ... *
சாதித்தசாதனமூடமேயாகியர்கணமதென்று ... *
சங்கிப்பராதலாலே ... ... ... *
தன்னிலேதானுயர்ந்துவிடுவோமெனத் ... ... *
தணியிருந்திடனங்ஙனே ... ... ... *
சோதிக்கமனமாயைதனையேவிலக்கடிமை ... ... *
சுகமாவதெப்படிசொலாய் ... ... *
சுத்தநிர்க்குணமானபரதெய்வமேபரஞ் ... ... *
சோதியேசுகவாரியே ... ... (௯)

அண்டமுடிதன்னிலோபகிரண்டமதனிலோ ... *
வலரிமண்டலநடுவிலோ ... ... ... *
வனனடுவிலோவமிர்தமதிநடுவிலோவன்ப ... ... *
ரகமுருகிமலர்கணீவித் ... ... ... *
தெண்டமிடவருமூர்த்திநிலையிலோதிக்குத் ... ... *
திகந்தத்திலோவெளியிலோ ... ... *
திகழ்விந்துநாதநிலைதன்னிலோவேதாந்த ... ... *
சித்தாந்தநிலைதன்னிலே ... ... ... *
கண்டபலபொருளிலோகாணாதநிலையெனக் ... *
கண்டசூனியமதனிலோ ... ... *
காலமொருமூன்றிலோபிறவிநிலைதன்னிலோ ... *
கருவிகரணங்களோய்ந்த ... ... ... *
தொண்டர்களிடத்திலோநீவீற்றிருப்பது ... *
தொழும்பனேற்குளவுபுகலாய் ... ... *

# எங்குநிறைகின்றபொருள்.



அவனன்றியோரணுவுமசையாதெனும்பெரிய
வாப்தர்மொழியொன்றுகண்டா
லறிவாவதேதுசிலவறியாமையேதிவை
யறிந்தார்களறியார்களார்
மௌனமொடிருந்ததாரென்போலுடம்பெலாம்
வாயாய்ப்பிதற்றுமவரார்
மனதெனவுமொருமாயையெங்கேயிருந்துவரும்
வன்மையொடிரக்கமெங்கே
புவனம்படைப்பதென்கர்த்தவ்யமெவ்விடம்
பூதபேதங்களெவ்விடம்
பொய்மெய்யிதமகிதமேல்வருநன்மைதீமையொடு
பொறைபொறாமையுமெவ்விட
மெவர்சிறியரெவர்பெரியரெவருறவரெவர்பகைஞர்
யாதுமுனையன்றியுண்டோ
விகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே (க)

அன்னையனையுஞ்சிலசமயநின்னையே
யையாவையாவென்னவே
யலறிடுஞ்சிலசமயமல்லாதுமெய்போல
வலறியேயொன்றுமிலவாய்ப்
பின்னேதுமறியாமலொன்றைவிட்டொன்றைப்
பிதற்றிடுஞ்சிலசமயமேற்
பேசரியவெளியொன்றும்வெளியென்றுநாதாதி
பிறவுமேநிலையமென்றுந்
தன்னேரிலாதந்தாரணுவென்றுமூவிதத்
தன்மைபோங்காலமென்றுஞ்
சாற்றிடுஞ்சிலசமயமிவையாகிவேறதாய்ச்
சதாருணவானந்தபரா
பென்னையுன்னைகருணைவிளையாட்டிருந்தவா
றெம்மனோர்புகலவெளிதோ
விகபரமிரண்டினுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே (உ)

வேதமுடனாகமபுராணமிதிகாசமுதல்
வேறுமுளகலைகளெல்லா

மிக்கா வத்துவித துவிதமார்க்கத்தையே ... ... *
விரிவாயெடுத்துரைக்கு ... ... ... *
மோதரிய துவிதமேயத்துவித ஞானத்தை ... ... *
யுண்டுபண் ணுஞ்ஞானமாகு ... ... *
ஆகமநுபவசைவமென் றுக்குமொவ்வுமீ ... ... *
துபயவாதிகள் சம்மத ... ... ... *
மாதவினெனக்கிளிச்சரியையாதிகள்போது ... ... *
மிபாதொன் றுபாவிக்கநா ... ... ... *
னதுவாதலாலுன்னை நானென்றுபாவிக்கி ... ... *
னத்துவிதமார்க்கமுறலா ... ... ... *
மேதுபாவித்திடினுமதுவாகிவந்தருள்செ ... ... *
யெந்தைநீகுறையுமுண்டோ ... ... *
விகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி ... ... *
யெங்குநிறைகின்றபொருளே ... ... (௩)

சொல்லாணையிற்சற்றும்வாராதபிள்ளையைத் ... *
தொட்டில்வைத்தாட்டியாட்டித் ... ... *
துடையினைக்கிள்ளல்போற்சங்கற்பமொன்றிற் ... ... *
றெடுக்குந்தொடுத்தழிக்கும் ... ... *
பொல்லாதவாதனையெனுஞ்சப்தபூமியிடை ... ... *
போந்துதலைசுற்றியாடும் ... ... ... *
புருஷனிலடங்காதபூவைபோற்றனே ... ... ... *
பறம்போந்துசஞ்சரிக்கும் ... ... ... *
கல்லோடிரும்புக்குமிகவன்மைகாட்டிடுங் ... ... *
கருதுக்கட்டெல்லாங் ... ... ... *
கண்டதாகக்காட்டியேயனுவாச்சுருக்கிடுங் ... ... *
கபடநாடகசாலமோ ... ... ... *
வெல்லாமும்வலதிந்தமனமாயையேயழியா ... ... *
மென்றாலடக்கவசமோ ... ... ... *
விகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி ... ... *
யெங்குநிறைகின்றபொருளே ... ... (௪)

கண்ணாரநீர்மல்கியுள்ளநெக்குருகாத ... ... *
கள்ளனேனுனுலுமோ ... ... *
கைகுவித்தாடியும்பாடியும்விடாமலே ... ... *
கண்பனித்தாணைகாட்டி ... ... ... *
[illegible]ண்ணுபாருஞ்சோரியப்பாவுனக்கடிமை ... ... *
யானெனவுமெழுந்து ... ... ... *

வன்பாகிநாடகாரடிக்கடிதோருறைவில்லை
யகிலமுஞ்சிறிதிபுமேற்
றன்னாநின்னதருளறியாததல்லவே
சற்றேனுமினிதுரங்கிச்
சாசுவதமுக்திநிலையேதென்றுணர்த்தியே
சகசநிலைதந்துவென்றுன்
றென்னாமலுள்ளபடிசுகமாயிருக்கவே
யேழையேற்கருள்செய்கண்டா
யிகபரமிரண்டினுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே (௫)

காகமானதுகோடிகூடுகின்றாலுமொரு
கல்லின்முன்னெதிர்நிற்குமோ
கர்ம்மமானதுகோடிமுன்னேசெய்தாலுநின்
கருணைப்ரவாகவருளைத்
தாகமாநாடினரைவாதிக்கவல்லதோ
தமியனேற்கருட்டாகமோ
சற்றுமிலையென்பதுவும்வெளியாச்சுவினையெலாஞ்
சங்கேதமாய்க்கூடியே
தேகமானதைமிகவும்வாட்டிதேதுன்பங்கள்
சேராமல்யோகமார்க்க
சித்தியோவரவில்லைசகசநிஷ்டைக்குமென்
சிந்தைக்கும்வெகுதூரநா
னேகமாய்நின்னோடிருக்குநாளெந்தநா
ளிந்நாளின்முற்றுறுதோ
விகபரமிரண்டினுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே (௬)

ஒருமைமனதாகியல்லறநின்னருளி
லொருவனுன்வந்திருக்கி
னுலகம்பொருததோமாயாவிசித்ரமென
வோயுமோவிடமில்லையோ
வருளுடையநின்னன்பர்சங்கைசெய்திடுவரோ
வலதுகிர்த்தியகர்த்தரா
யகிலம்படைத்தெம்மையாள்கின்றபேர்சில
ரடாதென்பரோவகன்ற
பெருமைபெறுபூரணங்குறையுமோபூதங்கள்
பேய்க்கோலமாய்விண்டை

யிகபரயிரண்டினிலுமுயிரினுக்குயிராகி ... ... *
யெங்குநிறைகின்றபொருளே ... ... (௯)

முத்தனையமூரலும்பவளவாயின்சொலு ... ... *
முகத்திலகுபசுமஞ்சளு ... ... ... *
மூர்ச்சிக்கவிரகசன்னதமேற்றவிருகும்ப ... ... *
முலையின்மணிமாலைநால ... ... *
வைத்தெதைமயக்கியிருகண்வலையைவீசியே ... *
மயாவிலாசமோக ... ... *
வாரிதியிலாழ்த்திடும்பாழானசிற்றிடை ... ... *
மடந்தையர்கள்சிற்றின்பமோ ... ... *
புத்தமிர்தபோகம்புசித்துவிழியிமையாத ... *
பொன்னாட்டும்வந்ததென்றாற் ... ... *
போராட்டமல்லவோபேரின்பமுத்தியிற் ... *
பூமியிலிருந்துகாணெ ... ... *
வெத்தனைவிதம்வருமென்றுகர்சென்றநெறி ... *
யிவ்வுலகமறியாததோ ... ... *
யிகபரயிரண்டினிலுமுயிரினுக்குயிராகி ... *
யெங்குநிறைகின்றபொருளே ... ... (௰)

உன்னிலையுமென்னிலையுமொருநிலையெனக்கிடந் ... *
துளறிமவத்தையாகி ... ... *
யுருவுதான்காட்டாதவாணவமுமொளிகண் ... *
டொளிக்கின்றவிருளென்னவே ... ... *
தன்னிலைமைகாட்டாதொருங்கவிருவினையினுற் ... *
றுவுசுகதுக்கவேலை ... ... ... *
தட்டழியமுற்றுமில்லாமாயைமதனுற் ... ... *
றடித்தகிலபேதமான ... ... *
முன்னிலையொழிந்திடவகண்டிதாகரமாய் ... ... *
மூதறிவுமேலுதிப்ப ... ... *
முன்பினொடுகீழ்மேனடுப்பக்கமென்னுமன் ... *
முற்றுமானந்தநிறைவே ... ... *
யென்னிலைமையாய்நிற்கவியல்புகூறருள்வடிவ ... *
மெந்நாளும்வாழிவாழி ... ... *
யிகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி ... ... *
யெங்குநிறைகின்றபொருளே ... (௰௧)



எங்குநிறைகின்றபொருள் - முற்றிற்று. ஆ. ௧௧.

தானேசுபாவந்தலைப்பட்டிற் றென்றானை - - *
வானருணையரும்வருவாரோபைங்கிளியே - - (௫௭)
கள்ளத்தலைவர்கைகாட்டிப்பேசாமல் - - *
உள்ளத்தில்வந்தவுபாயமென்னோபைங்கிளியே - (௫௮)

பைங்கிளிக்கண்ணி - முற்றுப்பெற்றது. ஆ-து ௮௨.

---

# எந்நாட்கண்ணி.

## தெய்வவணக்கம்.

நீர்பூத்தவேணிநிலவெறிப்பமன்றாடுங் - - *
கார்பூத்தகண்டனைநான்காணுநாளெந்நாளோ - (௧)
பொன்னுருமன்றுள்மணிப்பூவைவிழிவண்டுகந்து - *
தென்னாமுதினலமிச்சிப்பதெந்நாளோ - - (௨)
நீக்கிமலக்கட்டறுத்துந்நமைவெளியிலெம்மைத் - *
தூக்கிவைக்குந்தனைத்தொழுதிடுநாளெந்நாளோ - (௩)
கருமுகங்காட்டாமலென்றுங்கர்ப்பூரம்வீசுந் - - *
திருமுகமேநோக்கித்திருக்கறுப்பதெந்நாளோ - (௪)
நெஞ்சேசெலெனும்விழிபார்வைட்கைநஞ்சுக்கஞ்சினளை - *
யஞ்சேலெனுங்கைக்கபயமென்பதெந்நாளோ - (௫)
ஆறுசமயத்துமதுவதுவாய்நின்றிலங்கும் - - *
வீறுபடாதிருத்தாண்மேவுநாளெந்நாளோ - (௬)
பச்சைநிறமாய்ச்சிவந்தபாகங்கலந்துலகை - - *
யிச்சையுடனீன்றோனையாங்காண்பதெந்நாளோ - (௭)
ஆதியந்தங்காட்டாதகண்டிதமாய்நின்றுணர்த்தும் - *
போதவடிவானடியைப்போற்றுநாளெந்நாளோ - (௮)
கங்கைநிலவுசடைக்காட்டானைத்தந்தையெனும் - *
பங்கவெண்கோட்டானைப்பதப்புந்திவைப்பதெந்நாளோ (௯)
அஞ்சுமுகங்காட்டாமலாறுமுகங்காட்டவந்த - - *
செஞ்சரணச்சேவடியைச்சிந்தைவைப்பதெந்நாளோ - (௰)
தந்தையிருதாடுணிக்கத்தம்பிரான்றாள்சேர்ந்த - *
மைந்தையிருதாளிணைக்கேயின்புறுவதெந்நாளோ - (௰௧)

தெய்வவணக்கம் - முற்றுப்பெற்றது. ஆ-து ௬௯.

---

## குருமரபின்வணக்கம்.

துய்யகரமலராற்சொல்லாமற்சொன்னவுண்மை - *
யையனைக்கல்லாலரசையடைவதெந்நாளோ - (௧)
சிந்தையினுக்கெட்டாதசிற்சுகத்தைக்காட்டவல்ல - *
நந்தியடிக்கீழ்க்குடியாய்நாமணைவதெந்நாளோ - (௨)

சக்கரவர்த்தித்தவராஜயோகியெனு - - - *
மிக்கதிருமூலனருண்மேவுநாளெந்நாளோ - - ௭
கந்தரநுபூதிபெற்றுக்கந்தரநுபூதிசொன்ன - - *
வெந்தையருணாடியிருக்குநாளெந்நாளோ - - ௮
எண்ணரியசித்தரிமையோர்முதலான - - *
பண்ணவர்கள்பத்தருள்பாலிப்பதெந்நாளோ - ௯

அடியார்வணக்கம் முற்றுப்பெற்றது. ஆக-தாய௯.

---

## யாக்கையைப்பழித்தல்.

சுக்கிலமுநீருஞ்சொரிமலமுநாறுமுடற் - - *
புக்குழலும்வாழ்க்கையினிப்போதுமென்பதெந்நாளோ - ௧
நீர்க்குமிழிபூணமைத்துநின்றாலுநில்லாமெய் - - *
பார்க்குமிடத்திதன்மேற்பற்றறுவதெந்நாளோ - ௨
காக்கைநரிசெந்நாய்கழுகொருநாள்கூடியுண்ணுந் - - *
தேக்குவிருந்தாமுடலைச்சீயென்பதெந்நாளோ - - ௩
செங்கிருமியாகிச்செனித்தஜென்மபூமியினை - - *
யிங்கெனுடலென்னுமிழுக்கொழிவதெந்நாளோ - - ௪
தத்துவர்தொண்ணூற்றறுவர்தாமாய்வாழ்ந்நாட்டைப் - *
பித்தனென்னும்பிதற்றொழிவதெந்நாளோ - - ௫
ஊனென்றிநாதனுணர்த்துமதைவிட்டநிலை - - - *
நானென்றபாவிதனைநாணுநாளெந்நாளோ - - ௬
வேலையிலாவேதன்விதித்தவிந்த்ரஜாலவுடன் - - - *
மாலைவியாபாரமயக்கொழிவதெந்நாளோ - - - ௭
ஆழ்ந்துநினைக்கினரோகமாமிவ்வுடலில் - - - *
வாழ்ந்துபெறும்பேற்றைமதிக்குநாளெந்நாளோ - - ௮
மும்மலச்சேறானமுழுக்குப்பிபாகமெனு - - - *
மிம்மலகாயத்திகழ்ச்சிவைப்பதெந்நாளோ - - ௯
நாற்றமிகக்காட்டுநவவாயில்பெற்றபசுஞ் - - - *
சோற்றுத்துருத்திசுமையென்பதெந்நாளோ - - ௰
உருவிருப்பவுள்ளேதானூறுமலக்கேணி - - - *
யருவருப்புவாழ்க்கையைக்கண்டஞ்சுநாளெந்நாளோ - ௰௧

யாக்கையைப்பழித்தல்- முற்றுப்பெற்றது. ஆக-ஙாஉகு.

---

## மாதரைப்பழித்தல்.

மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப் - *
பொய்வீசும்வாயார்புலையொழிவதெந்நாளோ - - ௧

திண்ணியநெஞ்சப்பறவைசிக்கக்குழற்காட்டிக் *
கண்ணிவைப்பார்மயக்கங்கடக்குநாளெந்நாளோ ௨

கண்டுமொழிபேசிமனங்கண்டுகொண்டுகைவிலையாக் *
கொண்டுவிடுமாதர்பொய்க்கூத்தொழிவதெந்நாளோ ௩

காமனைவாவென்றிருண்டகண்வலையைவீசுமின்னார் *
நாமமறந்தருளைநண்ணுநாளெந்நாளோ ௪

கண்களில்வெண்பூளைகாட்டக்கருமையிட்ட *
பெண்கண்மயறப்பிப்பிழைக்குநாளெந்நாளோ ௫

வீங்கித்தளர்ந்துவிழுமுலையார்மேல்வீழ்ந்து *
தூங்குமதன்சோம்பலைத்துடைக்குநாளெந்நாளோ ௬

கச்சிருக்குங்கொங்கைக்கரும்பிருக்குமின்மாற்றம் *
வைச்சிருக்குமாதர்மயக்கொழிவதெந்நாளோ ௭

பச்சென்றகொங்கைப்பசப்பியர்பாழானமய *
லச்சென்றறிந்தருளைநண்ணுநாளெந்நாளோ ௮

உந்திச்சுழியாலுளத்தைச்சுழித்தகனை *
நந்தித்தனத்தார்த்தமைமறப்பதெந்நாளோ ௯

கட்டுவைத்துச்சேலைகொய்சகத்திற்சிந்தையெல்லாங் *
கட்டிவைக்குமாயமின்னார்கட்டழிவதெந்நாளோ ௰

ஆழாழியென்னவளவுபடாவஞ்சநெஞ்சப் *
பாழானமாதர்மயற்பற்றொழிவதெந்நாளோ ௰௧

தூயபனித்திங்கள்சுடுவதெனப்பித்தேற்று *
மாயமடவார்மயக்கொழிவதெந்நாளோ ௰௨

ஏழைக்குறும்புசெயுமேற்றிழையார்மோகமெனும் *
பாழைக்கடந்துபயிராவதெந்நாளோ ௰௩

விண்டுமொழிகுளறிவேட்கைமதுவுண்டுதருந் *
தொண்டியர்கள்கட்கடையிற்சுற்றொழிவதெந்நாளோ ௰௪

மெய்யிற்சிவப்பிறக்கமேவுமின்பம்போன்மாதர் *
பொய்யிலின்பின்றென்றுபொருந்துநாளெந்நாளோ ௰௫

மாதரைப்பழித்தல் முற்றுப்பெற்றது. ஆ[illegible]

---

## தத்துவமுறைமை.

ஐம்பூதத்தாலேயலக்கழித்ததேதாவிமற *
வெம்பூதநாதனருளெய்துநாளெந்நாளோ ௧

சத்தமுதலாம்புலனிற்சஞ்சரித்தகள்வரெனும் *
பித்தர்ப்பற்றீர்ந்துபிழைக்குநாளெந்நாளோ ௨

சஞ்சிகமேயாதிச்சரக்காணமுஞ்சேரும் - - *
வெந்தபொரியாகவருணம்பவுநாளெந்நாளோ - (௨௧)
தேகமுதநான்காத்திரண்டொன்றுப்பந்திலகு - - *
மோகமிகுமாயை மூடியுநாளெந்நாளோ - - (௨௨)
சத்தமுதலாதமைத்திங்கெமக்குணர்த்துஞ் - - *
அத்தமாமாயைதொடக்கறுவதெந்நாளோ - - (௨௩)
எட்டைமவினையையிறையையெம்பாற்காட்டாத - - *
வம்மைதிரோதையகலுநாளெந்நாளோ - - (௨௪)
நித்தியமாய்வந்துநினைவழிக்குங்கேவலமாஞ் - - *
சத்துருவைவெல்லுஞ்சமர்த்தறிவதெந்நாளோ - (௨௫)
சம்மைப்பின்வலானசகலமெனுங்குப்பையிடை - - *
மூன்னவத்தொனக்கணவேமூட்டுநாளெந்நாளோ - (௨௬)
மாயாவிகாரமலமொழிசுத்தாவத்தை - - *
தோயாவருளைத்தொடருநாளெந்நாளோ - (௨௭)

தத்துவமுறைமை-முற்றுப்பெற்றது. ஆ-௩௬௮.

---

தன்னுண்மை.

உடம்பறியுமென்னுமத்தவூழலெல்லாந்தீரத் - - *
திடம்பெறவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ - (௧)
செம்மையறிவாலறிந்துநீக்கிக்குள்ளிசைந்த - - *
வெம்மைப்புலப்படவேயாமறிவதெந்நாளோ - - (௨)
தத்துவமாம்பாழ்த்தசடவுருவைத்தான்சுமந்த - - *
சித்துருவாமெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ - - (௩)
பஞ்சப்பொறியையுயிரென்னுமந்தப்பஞ்சமறச் - - *
செஞ்செவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ - (௪)
அந்தக்கரணமுயிராமென்றவந்தரங்க - - *
சிந்தைக்கணத்திலெம்மைத்தேர்ந்தறிவதெந்நாளோ - (௫)
முக்குணத்தைச்சீவனென்னுமூடத்தைவிட்டருளா - *
லக்கணமேயெம்மையறிந்துகொள்வதெந்நாளோ - (௬)
காலையுயிரென்னுங்கலாதிகள்சொற்கேளாமற் - - *
சீலமுடனெம்மைத்தெளிந்துகொள்வதெந்நாளோ - (௭)
வான்கெடுத்துத்தேடுமதிகேடர்போலவெமை - *
நான்கெடுத்துத்தேடாமனன்கறிவதெந்நாளோ - (௮)

தன்னுண்மை-முற்றிற்று. ஆ-௩௭௬.

—※—

அருளியல்பு.

கனைத்தருநாடிநமக்குவேண்டாமென் - - *
றூனைத்தநாட்டிலவிதரிப்பதெந்நாளோ - - (௧)

# பொருளியல்பு.

கைவிளக்கின்பின்னேபோய்க்காண்பார்போன்மெய்ஞ்ஞான *
மெய்விளக்கின்பின்னேபோய்மெய்காண்பதெந்நாளோ (க)

கேழ்பசுபாசமெல்லாங்கீழ்ப்படவுங்காணாமே *
லுஞ்சுகப்பொருளுக்கன்புறுவதெந்நாளோ (௨)

ஆணவத்தைநீக்கியறிவூடேயைவகையாக் *
காணவத்தைக்கப்பாலேகாணுநாளெந்நாளோ (௩)

நீக்கப்பிரியாநினைக்கமறக்கக்கூடாப் *
போக்குவரவற்றபொருளணைவதெந்நாளோ (௪)

அண்டருக்குமெய்ப்பிலவைப்பாமாரமுதையென்னகத்திற் *
கண்டுகொண்டுநின்றுகளிக்குநாளெந்நாளோ (௫)

காட்டுந்திருவருளைக்கண்டுபர *
வீட்டின்பமெய்ப்பொருளைமேவுநாளெந்நாளோ (௬)

நாமுணதன்மைநழுவியெவ்வுயிர்க்குந் *
தாணுவுண்மைதலைச்சாருநாளெந்நாளோ (௭)

சிந்தைமறந்துதிருவருளாய்நிற்பவர்பால் *
வந்தபொருளுண்மையுந்தான்வாழ்விப்பதெந்நாளோ (௮)

எள்ளுக்குளெண்ணெய்போலெங்கும்வியாபகமா *
யுள்ளவொன்றையுள்ளபடியோருநாளெந்நாளோ (௯)

அருவுருவமெல்லாமகன்றதுவாயான *
பொருளெமக்குவந்துபுலப்படுவதெந்நாளோ (௰)

ஆரணமுங்காணாவகண்டிதாகாரபரி *
பூரணம்வந்தெம்மைப்பொருந்துநாளெந்நாளோ (௰க)

சத்தொடுசித்தாகித்தயங்கியவானந்தபரி *
சுத்தவகண்டசிவந்தோன்றுநாளெந்நாளோ (௰௨)

எங்கெங்கும்பார்த்தாலுமின்புருவாய்நீக்கமின்றித் *
தங்குந்தனிப்பொருளைச்சாருநாளெந்நாளோ (௰௩)

அடிமுடிகாட்டாசுத்தவம்பரமாஞ்சோதிக் *
கடிவெளிவந்தென்னைக்கலக்குநாளெந்நாளோ (௰௪)

ஒன்றனையுங்காட்டாவுளத்திருளைச்சூறையிட்டு *
நின்றபரஞ்சோதியுடனிற்குநாளெந்நாளோ (௰௫)

எந்தச்சமயமிசைந்துமறிவூடறிவாய் *
வந்தபொருளைப்பொருளாவாஞ்சிப்பதெந்நாளோ (௰௬)

எவ்வாறிங்கேற்றுணர்ந்தாரியாவரவர்தமக்கே *
ஒவ்வாருயிர்நின்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ (௰௭)

பெண்ணாசைவிட்டானவுந்தேசாமலென்னறிவின் - - *
கண்ணாட்டநின்றவொன்றைக்காணுநாளெந்நாளோ - (௰௮)
நினைப்புமறப்புமறநின்றபராஞ்சோதி - - *
தனைப்புலமாவென்னறிவிற்சந்திப்பதெந்நாளோ - (௰௯)

பொருளியல்பு முற்றுப்பெற்றது - ஆ. தொ. ௨௱௰௫.



# ஆனந்தவியல்பு.

பேச்சுமூச்சில்லாதபேரின்பவெள்ளமுற்று - - *
நீச்சுநிலைகாணாமனிற்குநாளெந்நாளோ - - (௧)
சித்தந்தெளிந்தோர்தெளிவிற்றெளிவான - - *
சுத்தசுகக்கடலுட்டோயுநாளெந்நாளோ - - (௨)
சிற்றின்பமூண்டுசிதையவனந்தங்கடல்போன் - *
முற்றின்பவெள்ளமெமைமூடுநாளெந்நாளோ - (௩)
எல்லையில்பேரின்பமயமெப்படியென்றோர்தமக்குச் - *
சொல்லறியாவூமர்கள்போற்சொல்லுநாளெந்நாளோ - (௪)
அண்டரண்டகோடியனைத்துமேகாந்தவெள்ளங் - *
கொண்டதெனப்பேரின்பங்கூடுநாளெந்நாளோ - (௫)
ஆதியந்தமில்லாதவாதியனாதியெனுஞ் - - *
சோதியின்பத்தோடேதுளையுநாளெந்நாளோ - - (௬)
சாலோகமாதிசௌக்கியமும்விட்டநம்பான் - - *
மேலானஞானவின்பமேமேவுநாளெந்நாளோ - - (௭)
தற்பரத்தினுள்ளேயுஞ்சாலோகமாதியெனும் - - *
பொற்பறிந்தானந்தம்பொருந்துநாளெந்நாளோ - (௮)
உள்ளத்தினுள்ளேகாணுஞ்சிவானந்த - - *
வெள்ளந்துளைந்துவிடாய்தீர்வதெந்நாளோ - - (௯)
கன்னலுடன்முக்கனியுங்கற்கண்டுஞ்சீனியுமாய் - *
மன்னுமின்பவாரமுதைவாய்மடுப்பதெந்நாளோ - (௰)
மண்ணாதிமூன்றமயக்கமெல்லாந்தீர்ந்திடவும் - - *
விண்ணாட்டமூழ்ந்தசுகமேவுநாளெந்நாளோ - (௰௧)
ஊனைத்தசலம்போயறகட்டுழலைப்போய்த்தீர - - *
வானமுதவாவிமருவுநாளெந்நாளோ - - (௰௨)
தீங்கரும்பென்றாலினியாதென்றாலினிப்பனபோற் - *
பாங்குறும்பேரின்பம்படைக்குநாளெந்நாளோ - (௰௩)
புண்ணியபாவங்கள்பெருந்தாமெய்யன்பரெல்லா - *
நண்ணியபேரின்பசுகநாமணைவதெந்நாளோ - (௰௪)

ஆனந்தவியல்பு முற்றுப்பெற்றது - ஆ. தொ. ௨௨௭.

# அன்புநிலைமை.

தக்கரவிகண்டசரோருகம்போலென்னிதய - - *
மிக்கவருள்கண்டுவிகசிப்பதெந்நாளோ - - ௧
வானமுகில்கண்டமயூரபக்ஷிபோலவையன் *
ஞானநடங்கண்டுநடிக்குநாளெந்நாளோ - - ௨
சந்திரனைநாடுஞ்சகோரபக்ஷிபோலறிவில் - - *
வந்தபரஞ்சோதியையாம்வாஞ்சிப்பதெந்நாளோ - ௩
சூத்திரமெய்ப்புற்றத்துக்குண்டலிப்பாம்போன்மூட்டுஞ் - *
சித்தனையென்கண்ணுற்றெறிசிப்பதெந்நாளோ - ௪
அந்தரத்தேநின்றுமானந்தக்கூத்தனுக்கென் - *
சிந்தைதிறைகொடுத்துச்சேவிப்பதெந்நாளோ - ௫
கள்ளனிவனென்றுதள்ளக்கைவிடுதல்காரியமோ - *
வள்ளலேயென்றுருகுநாளெந்நாளோ - ௬
வீண்டருடர்காணுவிடல பராஞ்சோதி - - *
யண்ணாவாவாவென்றரற்றுநாளெந்நாளோ - - ௭
ஏதுஞ்செய்தாலுமெய்ப்பணிபோனிற்பணியா - - *
மாதேவாவென்றுருகுநாளெந்நாளோ - - ௮
பண்டுங்காணேனென்பழம்பொருளேயின்றுனைக் - *
கண்டுங்காணேனெனவுங்கைகுவிப்பதெந்நாளோ - ௯
பொங்கேதமானபுழுக்கமெல்லாந்தீரவின்ப - *
மெங்கேயெங்கேயென்றிரங்குநாளெந்நாளோ - ௰
கடலின்மடைகண்டதுபோற்கண்ணீராறு - - *
வுடல்வெதும்பிமூர்ச்சித்துருகுநாளெந்நாளோ - ௰௧
புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப்போனேனிற்காண - *
வலந்தேனென்றேங்கியழுங்குநாளெந்நாளோ - ௰௨
புண்ணீர்மையாளர்புலம்புமாபோற்புலம்பிக் - - *
கண்ணீருங்கம்பலையுங்காட்டுநாளெந்நாளோ - ௰௩
போற்றேனென்றாலுமெனைப்புந்திசெய்யும்வேதனைக்கிங் - *
காற்றேனாற்றேனென்றரற்றுநாளெந்நாளோ - ௰௪
பொய்ம்முடங்கும்பூமிசைபோட்டலறப்பூங்கமலன் - *
கைமுடங்கநான்சனனக்கட்டறுவதெந்நாளோ - ௰௫
கற்குணத்தைப்போன்றவஞ்சக்காரர்கள்கைகோவாம - *
னற்குணத்தார்கைகோத்துநான்றிரிவதெந்நாளோ - ௰௬
துட்டனைமாமாயைச்சுழனீக்கியந்தரமே - - *
விட்டனையோவென்றுவியக்குநாளெந்நாளோ - ௰௭

அன்புநிலைமை-முற்றுப்பெற்றது- ஆக-௧௨௱௪௪.

## அன்பர்நெறி.

அத்துருவாயெல்லாமடங்கச்செத்தபடிச் *
சித்துருவாய்நின்றார்தெளிவறிவதெந்நாளோ ௧
மூச்சற்றுச்சிந்தைமுயற்சியற்றுமூச்சறிவாய்ப் *
பேச்சற்றோர்பெற்றவின்பம்பெற்றிடுநாளெந்நாளோ ௨
கோட்டாலையானகுணமிறந்துநிர்க்குணத்தோர் *
தேட்டாலேதேடுபொருள்சேருநாளெந்நாளோ ௩
கெடுத்தேபசுத்துவத்தைக்கேடிலாவானந்த *
மடுத்தோரடுத்தபொருட்கார்வைப்பதெந்நாளோ ௪
கற்கண்டாலோடுகின்றகாக்கைபோற்பொய்ம்மாயச் *
சொற்கண்டாலோடுமன்பர்தோய்வறிவதெந்நாளோ ௫
பெய்த்துன்பங்கல்விபுன்மைகேடெல்லாமோடவிட்ட *
சித்தரொன்றுஞ்சேராச்செயலறிவதெந்நாளோ ௬
குற்றச்சமயக்குறும்படர்ந்துதற்போத *
மற்றவர்கட்குற்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ ௭
தர்க்கமிட்டும்பாழாஞ்சமயக்குதர்க்கமிட்டு *
நிற்குமவர்கண்டவழிநேர்பெறுவதெந்நாளோ ௮
வீறியவேதாந்தமுதன்மிக்ககலாந்தவரை *
யாறுமுணர்ந்தோருணர்வுக்கன்புவைப்பதெந்நாளோ ௯
கண்டவிடமெல்லாங்கடவுண்மயமென்றறிந்து *
கொண்டநெஞ்சர்நேயநெஞ்சிற்கொண்டிருப்பதெந்நாளோ ௰
பாக்கியங்களெல்லாம்பழுத்துமனம்பழுத்தோர் *
நோக்குந்திருக்கூத்தைநோக்குநாளெந்நாளோ ௰௧
எவ்வுயிருந்தன்னுயிர்போலெண்ணுந்தபோதனர்கள் *
செவ்வறிவைநாடிமிகச்சிந்தைவைப்பதெந்நாளோ ௰௨

அன்பர்நெறி - முற்றுப்பெற்றது - ஆ_ - ௧௨௱௫௬.

## அறிஞருரை.

இருநிலனாய்த்தீயாகியென்றதிருப்பாட்டின் *
பெருநிலையைக்கண்டுணர்ந்துபேச்சறுவதெந்நாளோ ௧
அற்றவர்கட்கற்றசிவனாமென்றவத்துவித *
முற்றுமொழிகண்டருளின்மூழ்குநாளெந்நாளோ ௨
தானென்னைமுன்படைத்தானென்றதகவுரையை *
நானென்றுமுண்மைபெற்றுநானுணர்வதெந்நாளோ ௩
பாங்குடையதோரேழனுமாயென்றதிருப்பாட்டி *
னன்னெறியைக்கண்டுரிமைநாஞ்செய்வதெந்நாளோ ௪

ஆரூடனேசேருமறிவென்றவவ்வுரையைத் - *
தேரும்படிக்கருடான்சேருநாளெந்நாளோ - (௫)
உள்ளிலுள்ளுமென்றவுளுமெய்ம்மொழியாலெண்ணினையந் - *
தள்ளிலுள்ளிதன்னெறியைச்சாருநாளெந்நாளோ - (௬)
நிலைப்பட்டற்போவதனினைந்தேயென்றநிலைநாடி - *
யனைத்துமாமப்பொருளிலாழுநாளெந்நாளோ - (௭)
சென்றுசென்றேயணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாகி - *
நின்றுவிடுமென்றநெறிநிற்குநாளெந்நாளோ - (௮)
ஆதியந்தமில்லாவரியபரஞ்சோதி - - - *
நீதிமொழிகண்டதுவாய்நிற்குநாளெந்நாளோ - (௯)
பிறிதொன்றிலாசையின்றிப்பெற்றிருந்தேனென்ற - *
நெறியுடையான்சொல்லினிலைநிற்குநாளெந்நாளோ - (௰)
திரையற்றநீர்போற்றெளியவெனத்தேர்ந்து - - *
வுரையற்றியுற்றங்கொடுக்குநாளெந்நாளோ - - (௰௧)
அறியாவறிவில்வீழ்ந்தேறவென்ற - - *
நெறியாமுறையுணர்ந்துநிற்குநாளெந்நாளோ - (௰௨)
எனக்குநீயென்றுமியற்கையாட்பின்னு - - *
முனக்குநானென்றவுறுதிகொள்வதெந்நாளோ - (௰௩)
அறிவையறிவதுவேயாகும்பொருளென் - - *
றுறுதிசொன்னவுண்மையினையோருநாளெந்நாளோ (௰௪)

அறிஞருரை-முற்றுப்பெற்றது ஆகூ ௲௨௱௭௰.

---

நிற்குநிலை.

பண்ணினிசைபோலப்பரமன்பாநின்றதிற - - *
னெண்ணியருளாகியிருக்குநாளெந்நாளோ - (௧)
அறிவோடறியாமையற்றறிவினூடே - - *
குறிவிலறிவுவந்துகூடுநாளெந்நாளோ - - - (௨)
சொல்லான்மனத்தாற்றொடராச்சம்பூரணத்தி - - *
னில்லாநிலையாய்நிலைநிற்பதெந்நாளோ - - (௩)
செங்கதிரின்முன்மதியந்தேசடங்கிநின்றிட்டபோ - *
லங்கணனார்தாளிலடங்குநாளெந்நாளோ - - (௪)
வானூடடங்கும்வெளிபோலவின்புருவாங் - - *
கோனூடடங்குங்குறிப்பறிவதென்றுமோ - - (௫)
செப்பரியதன்கருணைச்சிற்சுகனார்பூரணத்தி - - *
லப்பினிடையுப்பாயணையுநாளெந்நாளோ - - (௬)
தூயவறிவானசுகரூபஞ்சோதிதன்பாற் - - *
றீயினிரும்பென்னவொத்திகழுநாளெந்நாளோ - - (௭)

தீசனைபாக்கர்ப்பூரதீபமெனநானகண்ட *
ஞ்சோதியிடமென்றென்மித்துரிசறுவதெந்நாளோ (௮)
ஆராருங்காணுமலர்ப்புகழுற்றொற்படிக்கீழ் *
நீசர்நிழல்போனிலவுநாளெந்நாளோ (௯)
எட்டக்கொலையாதவெந்தைபிரான்சன்னதியிற் *
பட்டப்பகல்விளக்காய்ப்பண்புறுவதெந்நாளோ (௰)
கருப்புவட்டைவாய்மடுத்துக்கண்டார்நாப்போல *
விருப்புவட்டாகவின்புருவைமேவுநாளெந்நாளோ (௰௧)
துச்சப்புலனெறிசுழலாமற்றன்னருளா *
லுச்சிக்கதிர்ப்படிகமொவ்வுநாளெந்நாளோ (௰௨)
இம்மாணிலத்திவிருந்தபடியேயிருந்து *
சும்மாவருளைத்தொடருநாளெந்நாளோ (௰௩)
தானவனாந்தன்மையெய்ப்பிக்கண்டமெனவண்டமெங்கு *
ஞானமதயானைநடக்குநாளெந்நாளோ (௰௪)
வொன்றிரண்டுமில்லதுவாயொன்றிரண்டுமுள்ளதுவாய் *
நின்றசமத்துநிலைநேர்பெறுவதெந்நாளோ (௰௫)
பாசமகலாமற்பதியிற்கலவாமன் *
மாசற்சமத்திருத்திவாய்க்குநாளெந்நாளோ (௰௬)
சிற்றறிவுமெள்ளச்சிதைந்தெம்மான்போதினை *
யுற்றறியாவண்ணமறிந்தோங்குநாளெந்நாளோ (௰௭)
தந்திரத்தைமந்திரத்தைச்சாயினவையாமறிவென் *
றெந்தையுணர்வேவடிவாவெய்துநாளெந்நாளோ (௰௮)
போக்குவரவற்றவெளிபோனிறைந்தபோதநிலை *
நீக்கமறக்கூடிநினைப்பறுவதெந்நாளோ (௰௯)
காண்பானுங்காட்டுவதுங்காட்சியுமாநின்றவந்த *
வீண்பாவம்போயதுவாய்மேவுநாளெந்நாளோ (௨௰)
வாடாதேநாவாய்மாயாதேயெங்கோவை *
நாடாதேநாடிநலம்பெறுவதெந்நாளோ (௨௧)
ஆடலையேகாட்டியமைதாடவொழித்தாண்டான்பொற் *
றாடலைமேற்சூடித்தழைக்குநாளெந்நாளோ (௨௨)
மேலொடுகீழில்லாதவித்தகனார்தம்முடனே *
பாலொடுநீர்போற்கலந்துபண்புறுவதெந்நாளோ (௨௩)
அறியாதறிந்தெமையாளண்ணலைநாமாகக் *
குறியாதவண்ணங்குறிக்குநாளெந்நாளோ (௨௪)
ஓராமன்மந்திரமுன்னுமனம்பரனைப் *
பூராமற்பார்த்துப்பழகுநாளெந்நாளோ (௨௫)

ஊர்ப்பற்றுமென்றேறுறவுபற்றும்பூரணன்பால் *
வார்ப்பற்றுங்கண்போன்மருவுநாளெந்நாளோ ௨௬
ஆண்டான்மௌனியளித்தவறிவாலறிவைத் *
தூண்டாமற்றூண்டித்துலங்குநாளெந்நாளோ ௨௭
ஆணவத்தோடத்துவிதமானபடிமெய்ஞ்ஞானத் *
தாணுவினோடத்துவிதஞ்சாருநாளெந்நாளோ ௨௮

நிற்குநிலை - முற்றிற்று - ஆக ௩௨௯௮.

## நிலைபிரிந்தோர்கூடுதற்குபாயம்.

கன்மநெறிதப்பிற்கடுநரகென்றெந்தநூ *
னன்மைதருஞானநெறிநண்ணுவதெந்நாளோ ௧
ஞானநெறிதானேநழுவிடினுமப்பதத்தி *
னானமுத்திநல்குமெனவன்புறுவதெந்நாளோ ௨
பன்மார்க்கமானபலவழிபட்டேனுமொரு *
சொன்மார்க்கங்கண்டுதுலங்குநாளெந்நாளோ ௩
அத்துவிதமென்றவன்னியற்சொற்கண்டுணர்ந்து *
சுத்தசிவத்தைத்தொடருநாளெந்நாளோ ௪
கேட்டன்முதனான்காலேகெடிலாநற்பதமும் *
வாட்டமறவெமக்குவாய்க்குநாளெந்நாளோ ௫
எண்ணரியானென்பதறவெவ்விடமுமென்றுசான் *
சந்திரியாக்கண்டுநிட்டைசாதிப்பதெந்நாளோ ௬
நாம்பிரமமென்றூனடுவேயான்றுண்டாமா *
றேப்பியெல்லாமொன்றாய்த்திகழுநாளெந்நாயோ ௭
மூச்சகமேயாதிமுழுதுமகண்டாகார *
சச்சிதானந்தசிவந்தானென்பதெந்நாளோ ௮
எவ்வடிவும்பூரணமாமெந்தையுருவென்றிசைந்த *
வெவ்வடிவுக்குள்ளேயடங்குநாளெந்நாளோ ௯
சிந்தித்தவெல்லாஞ்சிவபூரணமாக *
வந்தித்துவாழ்த்திவணங்குநாளெந்நாளோ ௰
தாங்கியபார்விண்ணூதிதாமேனுஞக்கினியா *
யோங்குமியோகவுணர்வுற்றிடுநாளெந்நாளோ ௰௧
ஆசனமூர்த்தங்களறவகண்டாகாரசிவ *
பூசைசெயவாசைபொருந்துநாளெந்நாளோ ௰௨
அஞ்செழுத்தினுண்மையதுவானவைப்பொருளை *
நெஞ்சழுத்தியொன்றாகிநிற்குநாளெந்நாளோ ௰௩
அவ்வுயிர்போலெவ்வுயிருமானபிரான்றன்னடிமை *
யெவ்வுயிருமென்றுடனியாஞ்செய்வதெந்நாளோ ௰௪

தேசிகர்கோ ஞானசிற்றன் மௌனிநந்தமக்கு *
வாசிதொடுக்கமகிழநாளெந்நாளோ ௰௫
குருலிங்கசங்கமமாக் கொண்டதிருமேனி *
யருண்மயமென்றன்புற்றருள்பெறுவதெந்நாளோ ௰௬

எந்நாட்கண்ணி - முற்றும் - ஆஉ தூகாயச.

---

## காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந்தோறுந்தெவிட்டாவமுதேயென் *
புந்திக்குணீதான்பொருந்திடவுங்காண்பேனோ ௧
கேவலத்திேறன்கிடர்ந்துகீழ்ப்படாதின்பவருட் *
காவலென்பாலொன்றிக்கலந்திடவுங்காண்பேனோ ௨
துரியங்கடந்தவொன்றேதூவெளியாய்நின்ற *
பெரியநிறைவேயுனைநான்பெற்றிடவுங்காண்பேனோ ௩
மாசற்றவன்பர்நெஞ்சேமாறுகப்பட்டகமாத் *
தேசுற்றமாமணிநின்றேசினையுங்காண்பேனோ ௪
மாயாவிகாரமலமகலவெந்தையிரா *
னேயானுபூதிநிலைபெறவுங்காண்பேனோ ௫
பொய்யுலகும்பொய்யுறவும்பொய்யுடலும்பொய்யெனவே *
மெய்யுநினைமெய்யெனவேமெய்ப்புடனேகாண்பேனோ ௬
வாலற்றபட்டமெனமாயாமனப்படலங் *
காலற்றுவீழ்வுறக்கண்ணுடையாய்க்காண்பேனோ ௭
உள்ளும்புறம்புமொருபடித்தாய்நின்றசுகங் *
கொள்ளும்படிக்கிறைநீகூட்டிடவுங்காண்பேனோ ௮
காட்டுகின்றமுக்கட்கரும்பேகனியேயென் *
னாட்டமெல்லாந்தீரவுனைநாடலையுங்காண்பேனோ ௯
தூங்காமற்றூங்கிச்சுகப்பெருமானின்னிறைவில் *
நீங்காமணிற்குநிலைபெறவுங்காண்பேனோ *
வாதவூரானிதனைவான்கருணையால்விழுங்கும் *
போதவூரோனேநின்பொன்னடியுங்காண்பேனோ ௰௧
சாட்டையிலாப்பம்பரம்போலாடுஞ்சடசால *
நாட்டமறவெந்தைசுத்தஞானவெளிகாண்பேனோ ௰௨
மற்றுபொன்வாழ்வேமரகதஞ்சேர்மணிக்கக் *
குன்றேநின்றாட்கீழ்க்குடிபெறவுங்காண்பேனோ ௰௩
பொய்யன்றறிந்தமைப்போகவொட்டாதையவிந்த *
வையங்களைமயக்கமாற்றிடவுங்காண்பேனோ. ௰௨

தாயினு நல்ல தயாளனே நின்னையுன்னித் ... *
தீயின் மெழுகொத் துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ. (௰௫)
என்செயினு மென்பெறினு மென்னிறைவா வேழையனியா ... *
னின்செயலென் றுன்னு நிலைவரக் காண்பேனோ. ... (௰௬)
எள்ளத் தனையுமிரக்கமிலா வென்பாவி ... ... *
யுள்ளத்து மெந்தையுலாவிடவுங் காண்பேனோ. ... (௰௭)
வஞ்சகத் துக்காலயமாம் வல்வினையேனுங் கெடுவே .... *
னெஞ்சகத்தி லையா நீநேர்பெறவுங் காண்பேனோ. (௰௮)
தொல்லைப் பிறவித் துயர்கெடவு மெந்தைபிரான் ... ... *
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ. ... (௰௯)
வாளாருங் கண்ணார் மயக்கடலி லாழ்ந்தேன்சற் ... ... *
றாளாக வெந்தை யருட்செயவுங் காண்பேனோ. ... (௨௰)
பஞ்சாய்ப் பறக்கு நெஞ்சப் பாவியை நீகூவி யையா ... ... *
வஞ்சாதே யென்றின் னருள்செயவுங் காண்பேனோ. (௨௧)
ஆடுகறங்காகி யலமந்து ழன்றுமனம் ... ... *
வாடுமெனை யையா நீவாவெனவுங் காண்பேனோ. ... (௨௨)
சிட்டர்க் கெளிய சிவனேயோ நீவினையேன் ... *
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனோ. ... (௨௩)
உண்ணின் றுணர்த்து முலைப்பிலா வொன்றே நின் ... *
றண்ணென்ற சாந்த வருள்சார்ந்திடவுங் காண்பேனோ. ... (௨௪)
ஓடுங் கருத்தொடுங்க வுள்ளுணர்வு தோன்ற நினைக் ... *
கூடும்படிக் கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ. ... (௨௫)
வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை ... ... *
நோக்காம னோக்கி நிற்கு நுண்ணறிவு காண்பேனோ. ... (௨௬)
இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய் கேளின்னருளா ... ... *
மவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ. ... (௨௭)
நித்தமா யொன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ் ... *
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ. ... (௨௮)
கண்ணிறைந்த மோனக் கருத்தேயென் கண்ணே யென் ... *
னுண்ணிறைந்த மாயையொழிந்திடவுங் காண்பேனோ. (௨௯)
அத்தா விமலா வருளாளா வானந்த ... ... ... *
சித்தா வெனக்குனருள் செய்திடவுங் காண்பேனோ. ... (௩௰)
வீணே பிறந்திறந்து வேசற்றே னாசையறக் ... *
காணே னிறைநின் கருணைபெறக் காண்பேனோ. ... (௩௧)
சட்டையொத்த விவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச ... *
நிட்டையைப் பெற்றையா நிருவிகற்பங் காண்பேனோ. ... (௩௨)

எல்லாந்தெரியுமிறைவாவென்னல்லவெல்லாஞ் ... ... *
சொல்லாமுனீதான்றெருகுத்திரங்கக்காண்பேனோ. ... (௬௩)
அண்டபகிரண்டமனைத்துமொருபடித்தாக் ... ... *
கண்டவர்கள்கண்டதிருக்காட்சியையுங்காண்பேனோ. (௬௪)
ஊனிருந்தகாயமுடனிருப்பவெந்தைநின்பால் ... ... *
வானிருந்தவென்னவுநான்வந்திருக்கக்காண்பேனோ. ... (௬௫)
தினையத்தனையுந்தெளிவறியாய்ப்பாவியே ... ... *
னினைவிற்பரம்பொருணீநேர்பெறவுங்காண்பேனோ. (௬௬)
துன்பமெனுந்திட்டனைத்துஞ்சூறையிடவையாவே ... *
யின்பவெள்ளம்வந்திங்கெதிர்ப்படவுங்காண்பேனோ. ... (௬௭)

காண்பேனோவென்கண்ணி- முற்றுப்பெற்றது- ஆ-குஅ௫௰௧.

---

# ஆகாதோவென்கண்ணி.

கல்லாதேனெஞ்சங்கரைந்துருகவெத்தொழிற்கும் ... *
வல்லாய்நின்னின்பம்வழங்கினலாகாதோ ... ... (௧)
என்னையறியவெனக்கறிவாய்நின்றருணின் ... ... *
றன்னையறிந்தின்பநலஞ்சாரவைத்தாலாகாதோ ... ... (௨)
பொய்ம்மயமோயானபுரைதீரவெந்தையின்ப ... *
மெய்ம்மயம்வந்தென்னைவிழுங்கவைத்தாலாகாதோ ... (௩)
மட்டிலாச்சிற்சுகமாம்வாழ்வேநின்னின்பமயஞ் ... ... *
சிட்டர்போல்யானருந்தித்தேக்கவைத்தாலாகாதோ ... ... (௪)
அத்தாநின்பொற்றாளடிக்கேயனுதினமும் ... ... *
பித்தாக்கியின்பம்பெருகவைத்தாலாகாதோ ... ... ... (௫)
மெல்லியலார்மோகவிழற்கிறைப்பேனையாநின் ... ... *
னெல்லையிலானந்தநலமிச்சித்தாலாகாதோ ... ... (௬)
சுட்டழகாவெண்ணுமனஞ்சூறையிட்டானந்தமயக் ... ... *
கட்டழகாநின்னைக்கலக்கவைத்தாலாகாதோ ... ... (௭)
சோதியேநந்தாச்சுகவடிவேதூவெளியே ... ... *
யாதியேநின்னையறியவைத்தாலாகாதோ ... ... ... (௮)
நேசஞ்சிறிதுமிலேனின்மலனேநின்னடிக்கே ... ... *
வாசஞ்செயவிரங்கிவாவென்றலாகாதோ ... ... ... (௯)
என்னறிவுக்குள்ளேயிருந்ததும்போலையாவே ... ... *
நின்னறிவுநின்னுடன்யானிற்கவைத்தாலாகாதோ ... ... (௰)
ஆதிப்பிரானென்னையன்னல்லவிருகளகலச் ... ... *
சோதிப்பிரகாசமயந்தோன்றுவித்தாலாகாதோ ... ... (௰௧)

ஆசைச்சுழற்கடலிலாழாமலையாநின் ... ... ... *
நேசப்புணைத்தாணிறுத்தினாலாகாதோ... ... (௰௨)
பாசநிகளங்களெல்லாம்பஞ்சாகச்செஞ்செவே ... ...*
ஈசவெனவாவென்றிரங்கினாலாகாதோ... ... ...(௰௩)
ஓயாப்புள்ளன்பாயுருகிவாய்விட்டரற்றிச் ... ... ... *
சேயாகியெந்தைநின்னைச்சேரவைத்தாலாகாதோ... ... (௰௪)
ஆதியாய்வாழ்வாயகண்டிதமாய்நின்றபரஞ் ... ... *
சோதிநீயென்னைத்தொழும்பனென்றாலாகாதோ... ... (௰௫)
மின்னாரைக்கண்டவிழிபோற்பரஞ்சோதி .. ... *
தன்னாரநின்னிறைவைக்காணவைத்தாலாகாதோ ... ... ௰௬
சோராமற்சேர்ந்துநின்றசின்மயனேநின்மயத்தைப் ... *
பாராமற்பாரெனநீபக்ஷம்வைத்தாலாகாதோ... ... ௰௭
கண்ணாடிபோலவெல்லாங்காட்டுந்திருவருளை ... ... *
யுண்ணாடியையாவுருகவைத்தாலாகாதோ... ... ௰௮
மூலவிருள்கால்வாங்கமூதறிவுதோன்றவருட் ... ... *
கோலம்வெளியாகவெந்தைகூடுவித்தாலாகாதோ... ... ௰௯
சாற்றரியவின்பவெள்ளந்தாக்குமதிமீமூழ்கி ... *
யூற்றமுறுமென்னவதிலுண்மைசொன்னாலாகாதோ ... ...௨௰
கையுங்குவித்திரண்டுகண்ணருவிபெய்யவரு... ... *
ளையநின்றட்கேழையடிமைநின்றாலாகாதோ .. ... ௨௧

ஆகாதோவென்கண்ணி- முற்றுப்பெற்றது- ஆக-௩௱௭௨.

---

## இல்லையோவென்கண்ணி.

ஏதுந்தெரியாதெனைமறைத்தவல்லிருளை ... ... ...*
நாதநீநீக்கவொருஞானவிளக்கில்லையோ... ... ... ௧
பணிபற்றுநின்றுபதைப்பறவென்கண்ணுண் ... ... *
மணியொத்தசோதியின்பவாரியெனக்கில்லையோ... ... ௨
எம்மாலறிவதறவெம்பெருமான்யாதுமின்றிச் ... ...*
சும்மாவிருக்கவொருசூத்திரந்தானில்லையோ ... ...௩
நாய்க்குங்கடையானேனாதாநின்னின்பமயம் ... *
வாய்க்கும்படியினியோர்மந்திரந்தானில்லையோ ... ... ௪
ஊனாகநிற்குமுணர்வைமறந்தையநீ ... ... *
தானாகநிற்கவொருதந்திரந்தானில்லையோ.. ... ... ௫
அல்லும்பகலுமகண்டவடிவேயுனைநான் ... ... *
புல்லும்படியெனக்கோர்போதனைதானில்லையோ... ... ௬

இல்லையோவென்கண்ணி- முற்றிற்று- ஆக-௩௱௭௮.



# வேண்டாவோவென்கண்ணி.

கண்டவடிவெல்லாநின்காட்சியென்றேகைகுவித்துப் ... *
பண்டுமின்றுநின்றவெனைப்பார்த்திரங்கவேண்டாவோ ... ௧
வாதனையையாட்டுமனப்பாம்புமாயவொரு ... ... *
போதனைதந்தையாபுலப்படுத்தவேண்டாவோ ... ... ௨
தன்னையறியத்தனியறிவாய்நின்றருளு ... ... *
நின்னையறிந்தென்னிலைவைநீங்கிநிற்கவேண்டாவோ... ... ௩
அள்ளக்குறையாவகண்டிதானந்தமெனும் ... ... *
வெள்ளமெனக்கையாவெளிப்படுத்தவேண்டாவோ ... ௪
அண்டனேயண்டரமுதேயென்னாருயிரே ... ... *
தொண்டனேற்கின்பந்தொகுத்திரங்கவேண்டாவோ ... ௫
பாராதேநின்றுபதையாதேசும்மாதான் ... ... *
வாராயெனவும்வழிகாட்டவேண்டாவோ... ... ... ௬

வேண்டாவோவென்கண்ணி முற்றுப்பெற்றது- ஆ௨ ௩௱௮௪.



## நல்லறிவேயென்கண்ணி.

எண்ணிறைந்தமேன்மைபடைத்தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க்... *
கண்ணிறைந்தசோதியைநாங்காணவா நல்லறிவே ... ... ௧
சித்தானதாமென்சடத்தைநாமென்னவென்றுஞ் ... ... *
சத்தானவுண்மைதனைச்சாரவா நல்லறிவே... ... ... ௨
அங்குமிங்குமெங்குநிறையற்புதனார்பொற்பறிந்து .... ... *
பங்கயத்துள்வண்டாய்ப்பயன்பெறவா நல்லறிவே ... .. ௩
கான்றசோறென்னவிந்தக்காசினிவாழ்வத்தனையுந் ... *
தோன்றவருள்வெளியிற்றோன்றவா நல்லறிவே .... ... ௪

நல்லறிவேயென்கண்ணி- முற்றுப்பெற்றது- ஆ௨ ௩௱௮௮,



## பலவகைக்கண்ணி,

என்னரசேகேட்டிலையோவென்செயலோவேதுமில்லை ... *
தன்னரசுநாடாகித்தத்துவங்கூத்தாடியதே... ... ... ௧
பண்டொருகானின்பாற்பழக்கமுண்டோவென்றதைநினைக் ... *
கண்டொருகாற்போற்றக்கருத்துங்கருதியதே .... ..... ௨
(வேறு) கண்டனவேகாணுமன்றிக்காணுமோகாணுமென் ..... *
கொண்டறிவேனெந்தைநினைக்கூடுங்குறிப்பினையே... ... ௩
கல்லாலடியில்வளர்கற்பகமேயென்னளவோ... ..... .... *
பொல்லாவினைக்குப்பொருத்தந்தான்சொல்லாயே... .... ௪
தப்பிதமொன்றின்றியதுதானாகநிற்கவுண்மை ... .... *
செப்பியதுமல்லாலென்சென்னியதுதொட்டனையே.... .... ௫

(வேறு.) மாசானநெஞ்சனியான் வஞ்சனெனப்பேருவாய்த்திறந்து *
பேசாமௌனம்பெருமான் படைத்ததுவே ... ... (௫)
கற்பதெல்லாங்கற்றேறுக்கண்ணுடையார் நின்பணியாய் ... *
நிற்பதுசற்றன்றே திருவிகற்பமானதுவே ... (௭)
முன்னளவிற்கண்மறுயன் றுணிவனென்றே ... *
எவ்வளவிலெந்தாயிரங்கா திருந்ததுவே ... (௮)

(வேறு.) நெஞ்சகம்வேறாகி நினைக்கூடவெண்ணுகின்ற ..... *
வஞ்சனுக்கின்பமெந்தாய் வாய்க்குமோவெவ்வாறே ... (௯)
(வேறு.) பள்ளங்கடோறும்பரந்தபுனல்போலுலகி ..... *
லுள்ளம்பரந்தாலுடையாயென்செய்வேனே ... (௰)
முன்னினைக்கப்பின்மறக்குமூடவிருளாகெடுவே *
னென்னினைக்கவென்மறக்கவெந்தைபெருமானே ... (௰௧)
வல்லாளாமோனாநின்வான்கருணையென்னிடத்தே ... *
யில்லாதேபோனாலெவ்வண்ணமுய்வேனே ... (௰௨)

(வேறு.) வாக்குமனமுமௌனமுறவெந்தைநின்னை ... *
நோக்குமௌனமிந்தநாலறிவிலுண்டாமோ ..... (௰௩)
ஒன்றாய்ப்பலவாயுலகமெங்குந்தானேயாய் ... .. *
நின்றாயையாவனேநீநீங்கற்கெளிதாமோ ..... (௰௪)
ஆவித்துணையேயருமருந்தேயென்றனைநீ ... *
கூவியழைத்தின்பங்கொடுத்தாற்குறைவாமோ ... (௰௫)
எத்தனையோநின்விளையாட்டெந்தாய்கேளிவ்வளவென் ... *
றத்தனையுமென்னாலறியுந்தரமாமோ ... (௰௬)
தேடுவார்தேடுஞ்சிவனேயோநின்றிருத்தாள் ..... *
கூடுவான்பட்டதுயர்கூறற்கெளிதாமோ ... (௰௭)

(வேறு.) பற்றினதைப்பற்றுமெந்தாய்பற்றுவிட்டாகேவலத்தி *
லுற்றுவிடுநெஞ்சமுனையொன்றிநிற்பதெப்படியோ (௰௮)
ஒப்பிலாவொன்றேநின்னுண்மையொன்றுங்காட்டாமற் ... *
பொய்ப்புவியைமெய்போற்புதுக்கிவைத்ததென்னேயோ (௰௯)
காலால்வழிதடவுங்காலத்தேகண்முளைத்தாற் ... *
போலேயெனதறிவிற்போந்தறிவாய்நில்லாயோ (௨௰)
தன்னரசுநாடாஞ்சடசாலபூமியிசை ..... ... *
யென்னரசேயென்னையிறையாகநாட்டினையோ ... (௨௧)

(வேறு.) திங்களமுதாநின்றிருவாக்கைவிட்டாசை ... *
பொங்குவிடமனையபொய்ந்நூல்படிப்பவனே ... (௨௨)
உன்னையுன்னையென்னையெடுத்துள்ளிருக்குநின்னிறைவை *
யின்னமின்னங்காணுமிலைந்தாய்கழல்வேனே ..... (௨௩)

ஆராவமுதனையவானந்தவாரியென்பாற் ... ... *
றாராமலையாநீதள்ளிவிடவந்ததென்றோ ... (௨௪)

பலவகைக்கண்ணிமுற்றுப்பெற்றது. ஆ-துசாய௨.



நின்றநிலை.

நின்றநிலையேநிலையாவைத்தானந்த ... ... *
நிலைதானேநிருவிகற்பநிலையுமாகி ... ...*
யென்றுமழியாதவின்பவெள்ளந்தேக்கி ... ... *
யிருக்கவெனத்தொடர்ந்துதொடர்ந்திருக்குமற்றோ ... ௧
இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமாதி ... ... *
யிதயமுங்கைகாட்டவேயிதயத்துள்ளே ... *
யொருக்காலேபுணர்ந்தவர்கட்கெக்காலுந்தா ... *
னொழியாதவின்பவெள்ளமுலவாநிற்கும் ... ௨
கற்றதுங்கேட்டதுந்தானேயதுக்காகக் ... *
கட்டமென்றுருட்டுதற்கோகல்லாலெம்மான் *
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு ... *
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ ... ௩

நின்றநிலை-முற்றுப்பெற்றது ஆ-துசாய௩-

பாடுகின்றபணுவல்.

பாடுகின்றபணுவலோர்க, டேடுகின்றசெல்வமே ... *
நாடுகின்றஞானமன்றி, லாடுகின்றவழகனே ... ௧
அத்தனென்றநின்னையே, பத்திசெய்துபணுவலாற் ... *
பித்தனின்றுபேசவே, வைத்ததென்னவாரமே ... ௨
சிந்தையன்புசோரவே, நைந்துநின்னைநாடினேன் ... *
வந்துவந்துளின்பமே, தந்திரங்குதாணுவே ... ௩
அண்டரண்டம்யாவுநீ, கொண்டுநின்றகோலமே ... *
தொண்டர்கண்டுசொரிகண்ணீர், கண்டநெஞ்சுகரையுமே ... ௪
அன்னைபோலவருண்மிகுத்து, மன்னுஞானவரதனே ... *
யென்னையேயெனக்களித்த, நின்னையானுநினைவனே ௫

பாடுகின்றபணுவல்-முற்றுப்பெற்றது. ஆ-துசாஉய.



# ஆனந்தக்களிப்பு.

சங்கரசங்கரசம்பு சிவ சங்கரசங்கரசங்கரசம்பு.

ஆதியநாதியுமாகி - எனக்கானந்தமாயறி வாய்நின்றிலங்குஞ்- சோதிமௌனியாய்த்தோன்றி - அவன் சொல்லாத வார்த்தையைச் சொன்னண்டிதோழி—சங்கர (௧)

சொன்னசொல்லேதென்றுசொல்வேன் - என்னைச்சூதாய்த்
தனிக்கவேசும்மாவிருக்கி முன்னிலையேதுமில்லாதே - சுகமுற்றச்
செய்தேயெனைப்பற்றிக்கொண்டாண்டி—சங்கர- ௨

பற்றியபற்றறவுள்ளே- தன்னைப்பற்றச்சொன்னான் பற்றிப்பா
ர்த்துவிடத்தே - பெற்றதைகயேதென்றுசொல்வேன் - சற்றும்பேசா
துசரியம்பேசினன்றோழி—சங்கர ௩

பேசாவிடுமைகள்பேசிச் - சுற்றப்பேயங்கமாகிப்பிதற்றித்தி
ரிந்தேன் - ஆசபிசாசைத்துரத்தி - ஐயனடியிணைக்கீழடக்கிக்
கொண்டாண்டி—சங்கர ௪

அடக்கிப்புலனைப்பிரித்தே- அவனாகியமௌனியிலன்புவளர்த்
தேன் -மடக்கிக்கொண்டானென்னைத்தன்னுட் - சற்றும்வாய்பேசா
வண்ணமரபுஞ்செய்தாண்டி—சங்கர ௫

மரபைக்கெடுத்தனன்கெட்டேன் - இத்தைவாய்விட்டுச்சொ
ல்லிடின்வாழ்வெனக்கில்லை - கரவுபுருஷனுமல்லன் - என்னைக்காக்
குந்தலைமைக்கடவுள்காண்பின்னே—சங்கர ௬

கடலின்மடைவிண்டதென்ன - இருகண்களுமானந்தக்கண்
ணீர்சொரிய உடலும்புளகிதமாக - எனதுள்ளமுருகவுபாயஞ்செ
ய்தாண்டி—சங்கர ௭

உள்ளதுமில்லதுமாய்முன் - னுணர்வதுவாயுன்னுளங்கண்ட
தெல்லாந் - தள்ளெனச்சொல்லியென்னையன் - என்னைத்தானாக்கிக்
கொண்டசமர்த்தைப்பார்தோழி—சங்கர ௮

பாராதிபூதநீயல்லை - உன்னிப்பாரிந்திரியங்கரணநீயல்லை-வா
ராயுணர்வுநீயென்றான் - ஐயனன்பாயுரைத்தசொல்லானந்தந்தோழி

அன்பருக்கன்பானமெய்யன் - ஐயனானந்தமோன னருட்கு
ருநாதன் - தன்பாதஞ்சென்னியில்வைததான் - என்னைத் தானறிந்
தேன்மனத்தாணிறந்ததனே—சங்கர ௰

இறப்பும்பிறப்பும்பொருந்த - எனக்கெவ்வணம்வந்ததென்
றெண்ணியான்பார்க்கின் - மறப்புநினைப்புமாய்நின்ற - வஞ்சமாயா
மனத்தால்வளர்ந்ததுதோழி—சங்கர ௰௧

மனந்தகல்லாமலனக்கன்றே - தெய்வமௌனகுருவாகிவந்து
கைகாட்டி- எனதாம்பணியறமாற்றி - அவனின்னருள்வெள்ளத்தி
ருத்திவைத்தாண்டி—சங்கர ௰௨

அருளாலெவையும்பாரென்றான் - அத்தையறியாதேசுட்டி
யென்னறிவாலேபார்த்தேன் - இருளானபொருள்கண்டதல்லாற்க
ண்டவென்னையுங்கண்டிலனென்னடிதோழி—சங்கர ௰௩

என்னையுந்தன்னையும்வேறு - உள்ளத்தெண்ணாதவண்ணமிரு
ண்டறநிற்கச் - சொன்னதுமோவொருசொல்லே - அந்தச்சொல்
லால்விளைந்தசுகத்தையென்சொல்வேன்—சங்கர ௰௪

விளையுஞ்சிவானந்தபூமி - அந்தவெட்டவெளிதன்னிற்கட் டிருளாங் - களையைக்களைந்துபின்பார்த்தேன் - ஐயன்களையன்றி வேறொன்றுங்கண்டிலன்றோழி— சங்கர. ௰௫

கண்டார்நகைப்புயிர்வாழ்க்கை - இருகண்காணநீங்கவுங்கண் டேற்றுயிற்றேன் - கொண்டார்போற்போனாலும்போகும் - இதிற்கு ணமேதுநலமேதுகூறாய்நீதோழி— சங்கர. ௰௬

நலமேதுமறியாதவென்னைச் - சுத்தநாதாந்தமோனமாநாட் டந்தந்தசஞ் - சலமேதுமில்லாமலெல்லாம் வல்லான்றானாயென்றலை மீதுதாக்கினன்றோழி— சங்கர ௰௭

தாக்குநல்லானந்தசோதி - அணுத்தன்னிற்சிறியவெனைத்தன் னருளாற் - போக்குவரவற்றிருக்கச் - சுத்தபூரணமாக்கினன்புதுமை காண்மின்னே— சங்கர ௰௮

ஆக்கியளித்துத்துடைக்குந் - தொழிலத்தனை வைத்துமெள்ள த்தனையனுந் - தாக்கறநிற்குஞ்சமர்த்தன் - உள்ளசாக்ஷியைச்சிந்திக்க த்தக்கதுதோழி— சங்கர. ௰௯

சிந்தைபிறந்ததுமாங்கே - அந்தச்சிந்தைபிறந்துதெளிந்தது மாங்கே - எந்தநிலைகளுமாங்கே - கண்டயான்றனிரண்டற்றிருந்தது மாங்கே— சங்கர ௨௰

ஆங்கென்றுமீங்கென்றுமுண்டோ - சச்சிதானந்தசோதியகண் டவடிவாய் - ஓங்கிநிறைந்ததுகண்டாற் - பின்னரொன்றென்றிரண்டெ ன்றுரைத்திடலாமோ— சங்கர. ௨௧

என்றுமழியுமிக்காயம் - இத்தையேதுக்குமெய்யென்றிருந்தீ ருலகீர் - ஒன்றுமறியாதநீரோ - யமனோலைவந்தாற்சொல்லவுத்தர முண்டோ— சங்கர ௨௨

உண்டேநமைப்போலவஞ்சர் - மலமூறித்ததும்புமுடலைமெ ய்யென்று - கொண்டோபிழைப்பதிங்கையா - அருட்கோலத்தை மெய்யென்றுகொள்ளவேண்டாமோ— சங்கர ௨௩

வேண்டாம்விருப்பும்வெறுப்பும் - அந்தவில்லங்கத்தாலேவிளை யுஞ்சனனம் - ஆண்டானுரைத்தபடியே - சற்றுமசையாதிருந்து கொள்ளறிவாகிநெஞ்சே— சங்கர ௨௪

அறிவாருமில்லையோவையோ - என்னையாதொன்றறியாதவங்க தேசத்தில் - வறிதேகாமத்தீவிற்சிக்கி - உள்ளவான்பொருடோற்க வோவந்தேனென்றோழி— சங்கர ௨௫

வந்தவரவைமறந்து - மிக்கமாதர்பொன்பூமிமயக்கத்திலாழ் ம் - இந்தமயக்கையறுக்க - எனக்கெந்தைமெய்ஞ்ஞான வெழில்வா ள்கொடுத்தான்— சங்கர ௨௬

வாளாருங்கண்ணியர்மோகம் - யமவாதைக்களைவளர்க்குமெய்யென்றே - வேளானவனுமெய்விட்டான் - என்னின்மிக்கோர்நற்கைவிதியன்றோதோழி—சங்கர. ௨௭

விதிக்கும்பிரபஞ்சமெல்லாஞ் - சுத்தவெளியின்மஞ்சளென்னவேவேதாகமங்கள் - மதிக்குமதனைமதியார் - அவர்மார்க்கந்துன்மார்க்கஞ்சன்மார்க்கமோமானே—சங்கர. ௨௮

துன்மார்க்கமாதர்மயக்கம் - மனத்தூயர்க்குப்பற்றாதுசொன்னேன்ஜனகன் - தன்மார்க்கநீதிதிட்டாந்தம் - அவன்றானந்தமானசதானந்தனன்றோ—சங்கர. ௨௯

அன்றென்றுமாமென்றுமுண்டோ - உனக்கானந்தம்வேண்டினறிவாகிச்சற்றே நின்றாற்றெரியுமெனவே - மறைநீதியெம்மாதிநிகழ்த்தினன்றோழி—சங்கரசங்கரசம்பு சிவசங்கரசங்கரசம்பு. ௩௰

ஆனந்தக்களிப்பு- முற்றுப்பெற்றது. ஆ. ஞசருய.

## அகவல்.

திருவருண்ஞானஞ்சிறந்தருள்கொழிக்கும் ... .. *
குருவடிவானகுறைவிலாநிறைவே ... .... ... ..... *
நின்றவொன்றேநிமலவடிவே...... ... ... ..... *
குன்றாப்பொருளேகுணப்பெருங்கடலே ..... ..... *
ஆதியுமந்தமுமானந்தமயமாஞ் ..... ... *
சோதியேசத்தேதொலைவிலாமுதலே . ... *
சீர்மலிதெய்வத்திருவருளதனாற் .. .... ..... *
பார்முதலண்டப்பரப்பெலாநிறுவி... ..... .. *
அண்டசமுதலாமெண்டருநால்வகை... ..... *
எழுபிறவியிற்றாழாதோங்கும் ... ..... *
அனந்தயோனியினினம்பெறமல்க... ... ..... *
அணுமுதலசலமானவாக்கையுங் ..... ..... *
கணமுதல்லளவிற்கற்பகாலமுங் ... ... *
கன்மப்பகுதித்தொன்மைக்கீடா ... ..... *
இமைப்பொழுதேனுந்தமக்கெனவறிவிலா ......*
எழையுயிர்த்திரள்வாழவமைத்தனை .... ... *
எவ்வுடலெடுத்தாரவ்வுடல்வாழ்க்கை ... ..... *
இன்பமெனவேதுன்பமிலையெனப்... ... ... *
பிரியாவண்ணமுரிமையின்வளர்க்க ... ... *
ஆசரவாகக்கனதனுமமைத்திட்... ... ..... *
டேமின்றியேதகநாளென ..... ... *
அறிவும்பாலறியாமையியக்கிக்... ..... *
காலமுங்கல்மழுங்கட்டுங்காட்டியே............ ....*

மேலுநரகமுமே சுகசுவர்க்கமும் ... ... *
மாலறவகுத்தனையேலும்வண்ணம் ... ... ... *
அமையாக்கதலிற்சமயங்காடி ... ... ... *
அறம்பொருளாதிறம்படுநிலையிற் ... *
குருவாயுணர்த்தியொருசாரம்பாலனைவருந் ... *
தத்தநிலையமுத்திமுடிவென .. ... *
வாத்தர்க்கமும்போதநூல்களும் ... ... *
நிறைவிற்காட்டியகுறைவின்றியவயங்க ... ... *
அங்கங்குநின்றனையெங்குமாகிச் ... ... *
சமையாதீதத்தன்மையாகி ... ... ... *
இமையோர்முதலியயாவருமுனிவருந் ... ... *
தம்மைக்கொடுத்திட்டெம்மையாளென ... ... *
ஏசற்றிருக்கமாசற்றஞான ... ... *
நலமுங்காட்டின்ஞானமிலைந்து ... ... *
நிலையுங்காட்டுந்தண்ணருட்கடலே ... ... *

அகவல் - முற்றுப்பெற்றது. ஆகூதசருக.

வண்ணம்.

அருவென்பனவுமன்றிவுருவென்பனவுமன்றி ... ... ... *
அகமும்புறமுமன்றிமுறைபிறழாது ... ... ... *
குறியுங்குணமுமன்றிநிறைவுங்குறைவுமன்றி ... ... *
மறையொன்றெனவிளம்பவிமலமதாகி ... ... ... *
அசலம்பெறவுயர்ந்துவிபுலம்பெறவளர்ந்து ... ... ... *
சபலஞ்சபலமென்றுளறிவினர்கண ... ... ... *
ஞானவெளியினின்மேவுமுயிராய் ... ... ... று
அனலொன்றிடவெரிந்துபுகைமண்டிடுவதன்று ... ... *
புனலொன்றிடவமிழ்ந்துமடிவிலதாதை ... ... *
சருவும்பொழுதுயர்ந்துசலனம்படுவதன்று ... ... ... *
சமர்கொண்டழிவதன்றெரியல்பினதாகும் ... ... *
அவனென்பதுவுமன்றிஅவளென்பதுவுமன்றி ... ... *
அதுவென்பதுவுமன்றிஎழில்கொடுலாவும் ... ... வ
ஆருநிலையறியாதபடியே ... ... ... ... *
இருளென்பதுவுமன்றிஒளியென்பதுவுமன்றி ... ... ... *
எவையுந்தனுளடங்கவொருமுதலாகும் ... *
உளதென்பதுவுமன்றிஇலதென்பதுவுமன்றி ... ... ... *
உலகந்தொழவிருந்தவயன்முதலோர்கள் ... ... *
எவருங்களைகொண்டுசமயங்களில்விழுந்து ... ... *
சுழலும்பொழுதிரங்கிஅருள்செயுமாறு ... ... *
கூறியஜகமாயையறவே ... ... வறு

எனதென்பதையிசைந்தவறிவின்றிரளினின்று ... ... ✲
மறிவொன்றிலைவிளங்குமுபயமதாக ... ... *
அறியுங்கரணமன்றுபிறியுந்தரணமன்று ... ... *
அசரஞ்சரமிரண்டுமொன்றுபடியாகி ... ... ... *
எதுசந்ததநிறைந்ததெதுசிந்தனையிறந்த ... ... *
தெதுமங்களசுகங்கொள்சுகவடிவாகும் ... ... *
யாதுபரமனந்தாடியறிநீ ... ... ... ௨
பருவங்குலவுகின்றமடமங்கையர்தொடங்கு ... ... *
கடைக்கணில்விழுந்துகெடுநினைவாகி ... ... *
கலையின்புடைமறைந்தமறியென்றவசமுண்டு ... ... *
வசனந்திரமுமின்றிஅவரிட்டமேறல் ... ... ... *
பருகுந்தொழிலிணங்கியிரவும்பகலுமின்சொல் ... ... *
பகரும்படிதுணிந்துகுழலழகாக ... ... ... *
மாலைவகைபலசூடியுடனே ... ... உவறு
பதுமந்தனையிசைந்தமுலையென்றதையுகந்து ... ... ... *
வறிவண்டெனவுழன்றுகலிலெனவாடுஞ் .. ... *
சிறுகிண்கிணிசிலம்புபுனைதண்டைகண்முழங்கும் ... *
ஒலிதன்றெனமகிழ்ந்துசெவிகொளநாசி ... ... *
பசுமஞ்சளின்வியந்தமணமுந்திடமுகந்து ... ... .. ... *
பனிமிஞ்சிடவிறைஞ்சிவரிசையினூடு . ... ... *
கவின்மிசைமுடிசூடிமயலாய் ... ... ... ஒ
மருளுந்தெருளும்வந்துகதியென்பதைமறந்து ... ... *
மதனன்சலதிபொங்கவிரணமதான ... ... *
அளிபுண்டனைவளைந்துவிரல்கொண்டுறவளைந்து ... *
சுரதஞ்சுகமிதென்றுபரவசமாகி .. .. ... *
மருவுந்தொழின்மிகுந்துதினமுந்தினமும்விஞ்சி ... ... *
வளருப்பிறைகுறைந்தபடிமதிச்சார .... ... *
வானரமதெனமேனிதிரையாய் ... ... ஒவறு
வயதும்படவெழுந்துபிணியுந்திமிதிமென்று ... ... *
வரவுஞ்செயலழிந்துளமலுமாகி ... ... *
அனமுஞ்செலுசலிந்திவிழியுஞ்சுடர்களின்று ... ... *
முதமுங்களைகளின்றுசரியெனநாடி ... ... *
மனையின்புறவிருந்தவினமுங்குலைகுலைந்து ... ... *
கலகஞ்செயவிருண்டயமன்வரும்வேளை ... ... *
எதுதுணைபழிகாரமனமே ... ... ... ௪

வண்ணம் - முற்றும். ஆஉதுசருஉ.

---

தாயுமானசுவாமிகள்பாடல் - முற்றுப்பெற்றது.

# அருள்வாக்கியவகவல்.



திருவளர்கருணைச்சிவானந்தபூரண ... ... *
மொருவருமறியாவொருதனிச்சித்து ... *
நவுந்தருபேதமாய்நாடகநடித்தற் ... ... *
பவந்தனைநீக்கிப்பரிந்தருள்பராபரங் ... *
கண்ணுங்கருத்துங்கதிரொளிபோல .... *
நண்ணிடவெனக்குநல்கியநன்மை .... ... *
யொன்றாய்ப்பலவாயொப்பிலாமோனக ... ... *
குன்றாய்நிறைந்தகுணப்பெருங்குன்ற .... *
மண்ணையும்புனலையும்வளியையுங்கனலையும் .... *
விண்ணையும்படைத்தவித்திலாவித்துப் ... *
பந்தமனைத்தையும்பாழ்படநூறியென் .... *
சிந்தையுட்புகுந்தசெழுஞ்சுடர்ச்சோதி ... *
விள்ளாஞ்ஞானம்விளங்கியமேலோர் .... *
கொள்ளைகொண்டுண்ணக்குறைவிலாநிறைவு .... *
தாட்டாமரைமலர்த்தாணினைப்பவர்க்குக் .. *
காட்டாவின்பங்காட்டியகதிநிலை ... ... *
வாக்கான்மனத்தான்மதித்திடவரிதென .... *
நோக்காதிருக்கநோக்கியநோக்க ... ... *
மாதியாயறிவாயகண்டமாயகண்ட.... .... *
சோதியாய்விரிந்துதுலங்கியதோற்றம் ... *
பரவெளிதன்னிற்பதிந்தவென்னுளத்தின் ... *
விரவிவிரவிமேற்கொளும்வெள்ளஞ் ..... *
சுட்டுக்கடங்காச்சோதியடியார்... ... ... *
மட்டுக்கடங்கும்வான்பெருங்கருணை ... ... *
யெல்லைக்கடங்காவேகப்பெருவெளி ... *
தில்லைப்பொதுவிற்றிருநடத்தெய்வம் .... *
வாதவூரொற்றையைவரிசையாய்விழுங்கும் ... *
போதவூர்மேவுகர்ப்பூரவிளக்குச் ... ... *
சுகனாயகண்டத்தாவெளியெல்லாந் ... .... *
திகழவேகாட்டுஞ்சின்மயசாக்ஷி... ... *

செழுந்தமிழ்ப்பனைச்சிவலிங்கமாகி ..... *
விழுங்கியருளவித்தகவேடம ... ..... *
யெழிறருபட்டினத்திறைவனையென்று ..... *
மழிவிலாவிலிங்கமாக்கியவனுஞ்சி .... *
சாந்தபூமிதன்னருள்வெள்ள ... ... *
மார்ந்தநீழலைசையாக்ககனம் ..... ..... *
பரவுவார்நெஞ்சிற்பரவியமாட்சி ... *
யிரவுபகலற்றவேகாந்தக்காட்சி ... .... *
யாட்சிபோலிருக்குமகிலந்தனக்குச் ... *
சாக்ஷியாயிருக்குந்தாரகத்தனிமுத ... *
லாணும்பெண்ணுமலியுமல்லாதோர் ..... *
தானுமாய்நின்றசத்தாந்தனிச்சுட ... *
ரொன்றுமெண்ணெயுமெய்ப்படியப்படி ... *
யுள்ளும்புறம்புமுலாவியவொருபொரு ..... *
ளளவிலாமதந்தொறுமவரவர்பொருளென ... *
வுளநிறைந்திருக்குமொருபொற்பணிதி ... *
துள்ளுமனப்பேய்துடிக்கத்தறிக்கக் ..... *
கொள்ளுமோனவாள்கொடுத்திடுமரசு ... *
பெரியபேறுபேசாப்பெருமை ... *
யரியவுரிமையளவிலாவளவு .. ... *
தூரியநிறைவுதோன்றாதீதம் ..... .... *
விரியுநல்லன்புவிளைத்திடும்விளைவு ... *
தீராப்பிணியாஞ்செனனமறுக்க ..... *
வாராவரவாய்வந்தசஞ்சீவி ... ... *
யாலைக்கரும்புபாகமுதக்கட்டிநீள் ... *
சோலைக்கனிபலாச்சுளைகதலிக்கனி ... *
பாங்குறுமாங்கனியாறேன்சருக்கரை ... *
யோங்குகற்கண்டுசேர்த்தொன்றாக்கூட்டி .... *
யருந்தியசமனைவறிஞர்சமாதியிற் ..... *
பொருந்தியவின்பம்பொழிசிற்சுகோதய ..... *
மெழுங்கணுநிறைந்தவியல்பினையெனக்குச் ... *
செங்கையால்விளங்கத்தெரித்தமெய்த்தேசிகன் *
றன்னையறிவித்துத்தற்பரமாகி ..... ...*
யென்னுளத்திருந்தருளேகநாயக ..... *
னடிமுடியில்லாவரும்பொருடனக்கு ... *
முடியடியிதுவெனமொழிந்திடுமுதல்வன் ... *

மெய்யலாமற்றவைமெய்யலவெல்லாம் .... *
பொய்யெனவறிவெனப்புன்மைகைபுரிந்தோ ..... *
னருளும்பொருளுமபேதமாயிருந்து ..... *
மிருசற்றினமனுமியனுமூண்டென்றே ... *
னருளாக்குண்டேலருளும்வெளிப்படும் ... *
பொருண்மையுந்தானேபொருந்துமென்றுரைத்தோன் *
சத்தசத்திரண்டுதன்மையுந்தானே ..... *
யொத்தலாற்சதசத்துவக்கொளவுரைத்தோ .. .. *
னாணவமருவிடினருளுருவென்னக் ..... *
காணநேர்மையாற்கணேவுரைத்தோன் ..... *
ஜெகமுள்ளளவுந்தீராதிருக்குங் ..... *
கன்மம்விடாதெனக்காட்டியவள்ள ... *
லுளதிலதெனவுமுறுதலான்மாயை ..... *
யுளதிலதெனவும்வகுத்தினிதுரைத்தோ ... *
னில்லறத்திருந்துமிந்தியமடக்கிய ... *
வல்லவன்றானேமகாயோகியென்றோன் ... *
றுறவறத்திருந்துங்குழமனக்குரங்கொண் ... *
டறவகையறியானஞ்ஞானியென்றே ... *
னிறவாமனந்தானிறக்கவுணர்த்திப் ... *
பிறவாவரந்தரும்போதிவாள ..... ... *
னத்தனதருளாலனைத்தையுமியக்குஞ் ..... *
சுத்தமாமாயையின்றோற்றமென்றுரைத்தோ ... *
னிருண்மலமகலவிசைந்ததிலழுத்தும் ..... *
பொருளநட்டிமாதைப்பொற்பெனப்புகன்றோன் *
வீறுசிவமுதல்விளம்பியபடியே ... *
யாறுமஞ்ஞியென்றறிஞருக்குரைப்போன் ... *
கொல்லாவிரதங்குலயத்தோர்க ..... *
ளெல்லாப்பெறுமியென்றியம்பியதயாநிதி ... *
தருமமுந்தானமுந்தவமும்புரிபவர்க் ... *
குரிமையாயவரோடுறவுகலப்பவன் ... *
றன்னுயிர்போலத்தரணியின்மருவிய ..... *
மன்னுயிரனைத்தையும்வளர்த்திடும்வேந்தன் ..... ... ...*
களவுவஞ்சனைகள்செய்கருமிகடமக்குந் ... *
தெளிவுவந்துறவருள்செய்திடுந்திறத்தோன் *
றான்பெறும்பேறுசகமெலாம்பெறவே ... *
வான்பெருங்கருணைவழங்கியமாரி ... *

தஞ்சமென்றடைந்ததாபதர்தம்மை ... *
யஞ்சலென்றருளுமறிஞர்சிகாமணி ... *
ஜீவகோடிகளுஞ்சித்தர்கோடிகளும் ... *
யாவரும்புகழுமையமுணர்ந்தோன் ... *
யானெனதென்றவிறைவனெம்பெருமான் ... *
றானவனாகியதலைவனெங்கோமா ... *
னருணகிரியார்க்காறுமுகன்சொலும் ... *
பொருணலமல்லதுபொருளெனமதியான் ... *
பூமுதலாப்பொலிந்திடுநாத ... ... *
மேபதமுங்கடந்தபெருந்தகைமூர்த்தி ... *
மூலாதாரமுதலாயுள்ள ..... ... *
மேலாதாரமும்வெறுவெளிகண்டவன் ..... *
மண்டலமூன்றிலுமன்னியவுருவிலுங் ... *
கண்டவையத்திலுங்கடவுளாய்நின்றோன் ... *
பகர்சமயந்தொறும்பரமேயிருந்து ... *
சுகநடம்புரியுந்தொழிலெனச்சொன்னோன் ... *
பேதவபேதம்பதாபேத ... ... *
போதமிதுவெனப்புகன்றிடும்புண்ணிய .... *
னதுநானெனவேயாற்றிடுமனுபவஞ் ... *
சதுர்வேதாந்தத்தன்மையென்றுணர்த்தோ ... *
னல்லும்பகலுமறிவானோர்க்குச் .... *
சொல்லும்பொருளுஞ்சுமையெனச்சொன்னோன் ..... *
சுதனேகுருவாஞ்சுவாமிநாயகற்கெனி ... *
னதிகமெய்ஞ்ஞானமல்லவோவென்றே ..... *
னேசயோகத்துயர்திருவெல்லாந்தொழும் ... *
ராஜயோகத்திறைராஜயோகத்தான் ... *
பொறுமைதெளிவுபுனிதவாசரா ... *
மறுவிலாவண்மைவாரமியற்கை ..... *
தண்ணமர்சாந்தந்தயங்கியகீர்த்தி ... *
யெண்ணெண்கலையிலிணையிலாக்கல்வி ... *
நல்லவிரக்கநடுநிலைசத்திய ..... ..... *
மில்லையென்னாமலவர்க்குந்தருங்கொடை ..... *
தற்குணமெலாநண்ணியபெருந்தகை ... *
சிற்குணவாரிதிருவருட்செல்வன் ... *
கரமேலெடுத்துக்கருத்துறவணங்கிப் ... *
பரமேயுனக்குப்பரமெனப்பகர்ந்தோ ..... *
னலடிமேவுமரசினையடுத்தே ... ... ..... *

சீலமெய்ஞ்ஞானந்தெளிந்தனனெனவுஞ்
சித்தமௌனியிடசித்தமாக
வைத்தநிலையில்வளர்ந்தனனெனவு
மூலமலர்மிசைமூலாந்தமௌனிதன்
பாலன்யானெனவும்பரிவொடுபகர்ந்தோன்
வடமொழிபயிற்சியின்மகிமையையுணர்ந்து
திடமுறமுப்பொருட்டிறத்தையுந்தெளிந்து
கண்டமுதென்னக்கனிரசமென்னத்
தண்டமிழ்மாரிதன்னைப்பொழிந்து
சித்தியுமுத்தியுஞ்சிறந்தருள்கொழிக்கு
நித்தியநிரஞ்சனநிராலம்பநிறைவைப்
பாடியுநாடியும்பணிந்தெழுந்தன்பா
லாடியுமாற்றியுமகங்குழைவெய்தியு
முடலங்குழையவுரோமஞ்சிலிர்ப்பப்
படபடென்றுள்ளம்பதைத்துப்பதைத்துப்
பாங்குறுநெட்டுயிர்ப்பாகிப்பரதவித்
தேங்கியேங்கியிரங்கியிரங்கி
யோய்ந்தபம்பரம்போலொடுங்கியேசிறிது
மேய்ந்தவிழிகளிமைப்பதுமின்றிச்
சோர்ந்துசோர்ந்துதுவண்டுதுவண்டுமெய்
யார்ந்தவன்போலவசமுற்றடிக்கடி
யுண்ணடுக்குறவேயுருகியேசற்றுத்
தண்ணமர்மொழியுந்தழுதழுத்திடவே
யுள்ளும்புறம்புமொருமித்துருகி
வெள்ளநீர்போல்விழிநீர்பெருக்கி
கன்றுபசுவைக்கருதிக்கதறிச்
சென்றுசென்றேறுடித்திகைப்பதுபோல
வெம்புநெக்குடையவிருகரங்குவித்துப்
புன்புலால்யாக்கைபொருந்தாதினியென
வுணர்ந்துணர்ந்தன்பாயுவகைமேற்கொண்டினிக்
கணப்பிரியேனெனக்கருதியேகுறித்துத்
திருவுருவெல்லாந்திருநீறிலங்க
விருகரனளினமியன்முடிகுவித்துப்
பூரணச்சந்திரன்போலொளிகாட்டுங்
காரணவதனங்கவின்குறுவெயர்வுற
விளநிலாவெனவேயிலங்கிடுசிறுநகை
தளதளவென்னத்தயங்கியெழில்பெற.

சித்தன்மையெல்லாமிசைந்துமிவனருட்
சித்தெனச்சிவகதிசேர்ந்தவருளாப்பப்
பாத்திரமாட்டப்பரிவுடனடிச்
சாத்திரங்காட்டித்தயவுசெய்தருளும்
வல்லவனெனவேடமன்னுயிர்க்காக
வெல்லையிலன்பனிவனெனவிளங்கி
யீனவுலகத்தியற்கைபொய்யென்றே
ஞானநூன்மெய்யெனநவின்றினிதிரங்கிக்
கேவலசகலங்கீழ்ப்படமேலாய்
மேவருஞ்சுத்தமெய்யினைநல்க
வருளேயுருவுகொண்டவனியில்வந்த
பொருளேயிவனெனப்பொலிந்திடும்புனிதன்
சைவஞ்சிவனுடன்சம்பந்தமென்பது
மெய்யுணர்ஞானப்விளக்குமென்றிசைத்தோன்
கதிர்விழியொளியுறக்கலத்தல்சித்தாந்த
விதிமுறையாமெனவிளம்பியமேலோன்
முடிவினிலாகமமுறையினுண்மையை
யடியனைக்குறித்துரைத்தருளியவண்ணல்
சிதம்பரநாமைதிறமாவுரைத்திறை
பதம்பரவெனப்பகர்பரமமெய்ஞ்ஞானி
முத்திடஞ்சாக்கரமுறைமையிலயிக்கயஞ்
சத்தியமிதுவெனச்சார்ந்தவர்க்குரைத்தோ
னஞ்செழுத்துள்ளேயனைத்தையுங்காட்டியென்
னெஞ்சழுத்தியகுருநீதிமாதவ
னெல்லாநிறைந்தவிறைவன்செயலெனக்
கல்லாவெனக்குங்கருணைசெய்கடவுள்
குருவருளாலேகூடுவதல்லாற்
றிருவருளுறாதெனத்தெரிந்திடவுரைத்தோன்
குருவுருவருளெனக்கொண்டபின்குறையாப்
பொருண்மயமாமெனப்புகன்றிடுபோத
னைந்தமூர்த்திகளையுமெழிற்குருவடிவெனச்
சிந்தையிற்றியக்கறத்தேர்ந்தவர்க்குரைத்தோன்
சுத்தசிவமென்றபேர்தான்படைத்ததுதா
னேதாவதேபொருளென்றெடுத்தெடுத்துரைத்தோன்
கல்லானைகன்னல்கவர்ந்திடச்செய்தவ
னெல்லாம்வல்லசித்தெம்மிறையன்றே
னெவ்வுயிர்த்தோற்றமிறைமேவியதிறஞ்
செவ்வியபிரம்படிசெப்பிடுமென்றே

## அருள்வாக்கியவகவல்.

னெவ்வணமேவரவநிசைத்தனரவருளர்க் ..... *
கவ்வணமாவனெம்மானெனவறைந்தோ ..... *
னொருபாணனுக்கேயொருசிவனோட்படின் ... *
வருமடியார்திறம்வழுத்தோலைதந்தோன் ... *
சிவனடியாரைச்சிவனெனக்காண்ப ... *
னெவனவன்சிவனேயென்றெடுத்துரைத்தோன் *
விருப்புவெறுப்பினைவேரறப்பறித்துக் ... *
கருப்புகாதென்னைக்காத்தருள்செய்தோ ... *
னிருசொல்லுரையாதியானின்பமெய்த ... *
வொருசொல்லுரைத்தவுயர்குணபூர ... *
ணத்துவமார்க்கமறையுமாற்றி ... ... *
தத்துவாதீதத்தன்மையைத்தந்தோன் ... *
திருமகண்மருவியதிகழ்வளமறைசையில் ... *
வருமுணர்வாளன்மருளிலாமனத்தா ..... *
னெண்ணியவெண்ணமெல்லாந்தெரிந்தெனக்குத் *
தண்ணருள்செய்தவன்றாயுமானவ ... *
னொருமொழிபகர்ந்தவுதவியாலவன்ற ... *
னிருபதமுப்போதிறைஞ்சிவாழ்த்துவனே ... *

தாயுமானசுவாமிகளுடைய மாணாக்கராகிய அருளையரென்பவர்

அந்தச்சுவாமிகளைத்துதிசெய்த,

அருள்வாக்கியவகவல்

முற்றுப்பெற்றது.



ஆக விருத்தம் - ௲௪௫௯.



